

"என் கண்மணியின்
மிருதுவான
சருமத்திற்கு
நான் ஜான்ஸன்ஸ்
பேபி சோப் ஒன்றையே
நம்புகிறேன்."




**வேறு எந்த சோப்பிலும்**
**ஜான்ஸன்ஸ் பேபி ஆயில் கிடையாது**

குழந்தைப் பராமரிப்பில் தலைமுறை தலைமுறையான நிறுவனம்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

Ogilvy&Mather 7764 TM



**தேர்தல் திருவிழா!**





# புத்தாண்டு காணப்போவது புதிய முதல்வரையா?

**"த**மிழ்ப் புத்தாண்டின் போது நான் தமிழக முதலமைச்சராக இருக்க வேண்டும்' என்று மைனாரிடி பிரதமரிடம் மிக நயமாகச் சொல்லிவிட்டு வந்திருக்கிறாராம் ஜெ! ஆயினும் தமிழக சட்டமன்றத் தேர்தல் மே மாதத்தில்தான் நடக்கும் போலிருக்கிறது. இந்த நிலையிலேயே இங்கு கட்சிகள் கூட்டணி அமைப்பதும், ஸீட்டுகளைப் பிரித்துக் கொள்வதும், போட்டியிட விரும்புகிறவர்களிடம் டெபாஸிட் வசூலிப்பதும் ஜரூராக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

காங்கிரஸ்காரர்களிடம் மட்டும் வேகம் ஏதும் இல்லை. "நாங்கள் மைனர் பார்ட்னர்தானே. பலனை அனுபவிக்கப் போவது 'அவர்'தானே!" என்று மனம் நொந்தார் மூப்பனார் ஆதரவாளரான பழைய எம். எல். ஏ. ஒருவர்.

கோஷ்டிப் பூ ச லு க் கு ப் பிரசித்தி பெற்ற தமிழக காங்கிரஸில் ஸீட் ஒதுக்கீடு பற்றிய அதிருப்திக்குச் ச ற் று ம் குறைவில்லை. காங்கிரஸ் கட்சி, தனது தனித்தன்மையை இழந்து, நிறையவே விட்டுக் கொடுத்து விட்டதாகப் பலரும் நினைக்கிறார்கள்." இந்த எண்ணம் தவறு. சட்டமன்றத் தேர்தலில், அவர்களுக்கு நாங்கள் விட்டுக் கொடுத்தாலும் பாராளுமன்றத் தேர்தலில் தமிழகத்திலும் பாண்டிச்சேரியிலுமாக உள்ள நாற்பது இடங்களில் எங்களுக்குக் கிட்டத்தட்ட முப்பது இடங்களை அ. தி. மு. க. விட்டுக் கொடுக்கும். இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால், காங்கிரஸுக்குப் பெரிய இழப்பு ஏதும் இல்லை என்பது புரியும். மேலும், தலைமை ஒரு முடிவு எடுத்து விட்டால், அதை ஏற்று நடப்பதுதான் தொண்டர்களுக்கு அழகு' என்று தமிழக காங்கிரஸ் துணைத் தலைவர் தங்கபாலு சொன்னாலும் கட்சிக்குள் முணுமுணுப்பு இல்லாமல் இல்லை. "ஜெயலலிதாதான் முதல்வர் என்ற ரீதியில் கூட்டு அமைந்துள்ளது. தமிழகத்தை ஆளத் தகுதியானவர் ஜெயலலிதா என்று காங்கிரஸ் கட்சி ஏற்றுக் கொண்டது மிகவும் வருந்தத்தக்கது" என்று மூப்பனார் கோஷ்டியினர் கருதுகிறார்கள்.

அதோடு மூப்பனார் ஆதரவு எம். எல். ஏக்கள் தங்களுக்கு மறுபடியும் அதே தொகுதியில் போட்டியிட வாய்ப்புக் கிடைக்கும் என்று உறுதியாக நம்பினாலும் எதிர்ப்புக் குரலைப் பலப்படுத்தினால் அவர்கள் கோஷ்டிக்குப் பத்து இடங்கள் கூடக் கிடைக்கும் என்றும் எதிர்பார்க்கிறார்கள்.

**இ**ந்த நிலையில் போட்டியிட விரும்பு





கிறவர்களிடம் வசூல் வேட்டை நடத்திக் கொண்டிருக்கிறது அ. தி. மு. க. கிட்டத் தட்ட இதுவரை ஒரு கோடி ரூபாய்க்கு மேல் வசூலாகி இருப்பதாகப் பேச்சு. 'தேர்தல் தேதி அறிவித்தால்தான் சென்னை போவேன்' என்று தினமும், சுப்பிரமணிய சாமியை வற்புறுத்திக் கொண்டிருக்கிறா ராம், ஹைதராபாத்தில் உட்கார்ந்து கொண் டிருக்கும் ஜெயலலிதா.

தி. மு. க. வட்டாரத்தில் குறிப்பிடத் தக்க அளவுக்கு எந்தச் சலசலப்பும் இல்லை. தேர்தல் விரைவில் வராது என்ற நினைப் பில் இருக்கிறார்கள் கழக உடன் பிறப்புக் கள். ஆனால் இளைஞரணி உடன் பிறப்புக் கள், கட்சி போட்டியிடும் இடங்களில் ஐம்பது சதவீதம் தங்களுக்கு ஒதுக்க வேண்டும் என்று கொடி தூக்கியிருக்கிறார் களாம். இரண்டு, மூன்று முறை எம். எல். ஏ. வாக இருந்தவர்களுக்கு இம்முறை விட் டுத் தரக் கூடாது என்பதிலும் இளைஞர்கள் பிடிவாதமாக இருக்கிறார்களாம். இதனால் பல முன்னணித் தலைவர்கள் கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் கலைஞர் எதையும் கண்டுகொள்ளவில்லை. '356' என்ற படத்திற்குத் திரைக்கதை அமைப்பதில் மிகவும் பிஸியாக இருக்கிறா ராம்!

வன்னியர் சங்கக் கட்சியான பாட்டாளி மக்கள் கட்சிக்கு இப்போது நல்ல கிராக்கி. ஒரு பக்கம் தி. மு. க. அதன் தோழமையை விரும்புகிறது. மற்றொரு பக்கம், திருநாவுக்கரசு அ. தி. மு. க., ராஜேந்தர் கட்சி போன்றவையும், பா. ம. க. தலைமையில் கூட்டணி அமைத்துப் போட்டியிட விரும்புகின்றன. அரூரில் கூடிய பா. ம. க. செயற்குழு, அ. தி. மு. க. — காங்கிரஸ் கூட்டணியில் சேரக் கூடாது என்று முடிவு எடுத்து விட்டது. வன்னியர் சங்கத் தலைவர் சுப்பிரமணியம், மற்றும் தீரன் போன்ற முக்கிய தலைவர்கள் தி.மு.க. வுடன் கூட்டணி உண்டாக்கினால்தான், ஓட்டு பிரிவதைத் தடுத்து, ஜெயலலிதாவுக் குப் பாதிப்பை உண்டாக்கலாம் என்று கருது கிறார்கள். தி. மு. க. ஆட்சியில் வன்னியர் களை மிகவும் பிற்படுத்தப்பட்டவர்கள் என்று அறிவித்து, மருத்துவ, பொறியியல் படிப்புகளில் அதிக வாய்ப்புக் கொடுத்தவர் கலைஞர்தான் என்பதால் அவருடன் கூட்டு வைத்துக் கொள்வதால் தவறில்லை என்பது இவர்கள் வாதம்.

ஆனால் ராமதாஸோ, 'தமது தனித் தன்மை பாதிக்கப்படுமே' என்று அஞ்சு கிறாராம். தாழ்த்தப்பட்டவர்களைக் கூட்டுச் சேர்த்துக் கொண்டு, மூன்றாவது அணி அமைப்பதையே அவர் விரும்புகிறாராம். இதற்காகவே, தாழ்த்தப்பட்டோர் தலைவர் இளையபெருமாளுடன் தமக்கு உள்ள பகை மையைக் கூடச் சரிசெய்திருக்கிறார். தனித்துப் போட்டியிடுவதென்று தற்போ தைக்கு பா. ம. க. முடிவெடுத்தாலும், பிற்பட்ட மக்களின் ஓட்டுக்கள் பிரியக் கூடாது என்ற அடிப்படையில் வி. பி. சிங்கின் முயற்சியில் கடைசி நேரத்தில் தி.மு.க.—பா.ம.க. கூட்டு சாத்தியம் என்றே சொல்லப்படுகிறது.

இதற்கிடையில், மத்தியப் புலனாய்வுத் துறை, தமிழகச் சட்டமன்றத் தேர்தலில் கட்சிகளின் வெற்றி வாய்ப்பைக் கணித் திருக்கிறது. அது பின்னணிப் பிரதமர் ராஜீவைத் திருப்திப்படுத்தும் நோக்கில்தான் அமைந்திருக்கும் என்றாலும் தேர்தல் கணிப்புக்கள் எப்போதுமே மெய்யாவது இல்லையே! திருவாளர் பொது ஜனத்தின் உள் மனசுக்குள் என்ன இருக் கிறதோ யாருக்குத் தெரியும்?

— ப்ரியன்

---

# விடுமுறைக்கு எங்கு போக விருப்பம்?

இதோ, பரீட்சைகள் நெருங்கி விட் டன. தொடர்ந்து விடுமுறை. பணம் ஒரு பிரச்னை இல்லை; வேறு தடங்கல்களும் இல்லை என்றால் இந்த விடுமுறைக்கு நீங்கள் எங்கே போக விரும்புவீர்கள்? ஏன்? சிறந்த ஒரு பக்கக் கட்டுரைக்குப் பரிசு ரூ. 50/-. சிந்தனைச் சிதறல்கள் பிரசுரமா னால் ஆறுதல் பரிசு. தவிர, மிக அதிகமான முதல் பரிசு பெற்ற மாணவருக்குப் பொன் விழா மேடையில் ரூ. 2500/- சிறப்புப் பரிசு. முடிவு தேதி: 2.3.91. உறை மீது, "விடு முறைக்கு எங்கே...?" என்று குறிப்பிடவும். கல்லூரி முகவரி எழுத மறவாதீர்கள்.

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**




**கல்லூரி மாணவர் கட்டுரைப் போட்டி**

# காசில்லாமல் சாப்பிட்டால் மாவாட்ட வேண்டுமா?






"ஓட்டலில் சாப்பிட்டுவிட்டுக் கையில் காசில்லாமல் மாவாட்டுகிற ஜோக்ஸ் ஏராளமாய்ப் பத்திரிகைகளில் வெளியாகின்றன. நிஜமாகவே, காசில்லாமல் சாப்பிட்டவர்களை மாவாட்டத்தான் சொல்கிறார்களா?" — இப்படியொரு சந்தேகத்தை எழுதிக் கேட்டிருந்தார் மதுரையைச் சேர்ந்த கல்கி வாசகரான ஆர். ஸ்ரீதரன். நாமும் சென்னையிலுள்ள ஓட்டல்களில் விசாரித்தோம்:

"அதெல்லாம் சும்மா சார்! இன்று சிறு ஓட்டல்களில் எல்லாம் கூட மாவாட்டுவதற்குக் கிரைண்டர்கள் வந்துவிட்டன! அப்புறம் காசில்லாமல் சாப்பிட்டவர்களை மாவாட்டச் சொல்லுவது எப்படி?" என்று கேட்டார் அடையாரில் உள்ள ஓர் ஓட்டலில் பணிபுரியும் தேவநாதன்.

"காசில்லாமல் சாப்பிடுபவர்களில் இரண்டு வகையினர் உண்டு!" என்று அமைந்தகரையில் உள்ள ஓர் ஓட்டல் மானேஜர் சாம்பசிவம் விளக்க ஆரம்பித்தார். "வேலை கிடைக்காத சூழ்நிலையில், பசி தாங்க முடியாமல், 'ஏதாவது வேலை கொடுத்தால் செய்கிறேன்! சாப்பாடு போடுங்கள்!' என்று கேட்பவர்கள் ஒருவகை. இன்றும் கூட இத்தகையவர்களை அடிக்கடி பார்க்கலாம். இன்னொரு வகை, கையில் பணம் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டு சாப்பிட்டுவிட்டு, பில்லுக்குப் பணம் தர வேண்டிய சமயத்தில், பணமில்லாததை அறிந்து, கையைப் பிசைகிறவர்கள். இப்படிப்பட்டவர்கள் ரொம்ப அபூர்வம்!

'நூறு ரூபாய் வைத்திருப்பவர்கள், சில்லறை இருக்கிறதா · என்று கேஷியரிடம் கேட்டுக் கொண்டபின், சாப்பிடவும்!" என்று கே. கே. நகர் ஓட்டல் ஒன்றில் அறிவிப்பு வைத்திருக்கிறார்கள். அது மாதிரியே, 'பில்லுக்குச் சரியான சில்லறை தரவும்!' 'பில்லுக்குரிய பணத்தைக் கேஷ் கவுண்ட்டரில் செலுத்தவும்' போன்ற அறிவிப்புகள் பல ஓட்டல்களில் சகஜமாய்க் காணப்படுபவைதாம். "இத்தகைய அறிவிப்புகள் வைப்பதன் நோக்கமே, சாப்பிட வருபவர்களைப் 'பணம் இருக்கிறதா?' என்று சோதனை பண்ணிக் கொள்ளச் செய்யும் மறைமுக உபாயம்தான்" என்றார் தி. நகர் ஓட்டல் ஒன்றில் பணிபுரியும் கணேஷ்.

பிரபல ஓட்டல் ஒன்றின் சூப்பர்வைசர், தனராஜுவிடம், "ஒருவர் சாப்பிட்டு விட்டுப் பணமில்லை! என்று சொன்னால் என்ன பண்ணுவீர்கள்?" என்று கேட்ட போது, "ஆளைப் பார்த்து, முடிவு செய்வோம். பர்ஸை மறந்துபோய் வந்துவிட்ட அறிமுகமான வாடிக்கையாளர் என்றால், 'அதுக்கென்ன ஸார், நாளைக்குச் சேர்த்துக் கொடுங்க' என்போம். அவரும் கொடுத்துவிடுவார். புதியவரானால் விசிட்டிங் கார்டு வைத்திருந்தால் வாங்கிக் கொள்ளுவோம். அல்லது அட்ரஸ் கேட்டு வாங்கிக் கொள்வோம். அநேகமாகப் பணம் வந்து சேர்ந்துவிடும். அபூர்வமாகவே ஏமாற்றப்படுவோம்" என்றார்.

மூப்பது வருட ஓட்டல் தொழில் அனுபவஸ்தரான மணி, "அந்தக்காலத்தில்காசில்லாமல் சாப்பிட்டவர்கள் மாவாட்டுவதை நானே பார்த்திருக்கிறேன். பிரம்மாண்டமான ஆட்டுக்கல் இருக்கும். ஆள் தெம்பானவராய் இருந்தால் மாவாட்டச் சொல்லுவார்கள்; அல்லது கிணற்றிலிருந்து தண்ணீர் இழுத்துக் கொட்டச் சொல்லுவார்கள். நோஞ்சான்களாக இருந்தால், மாவாட்டும் போது, கூட இருந்து மாவைத் தள்ளிவிடச் சொல்லுவார்கள்; பிளேட் கழுவச் சொல்லிவிடுவார்கள். ஆனால் இதெல்லாம் பழைய கதை. இப்போது அப்படியெல்லாம் கிடையாது" என்றார்.

நட்சத்திர ஓட்டல்களில் எப்படி? "பர்ஸில் பணம் போதிய அளவு இல்லை என்றால் கிரெடிட் கார்டு காட்டுவார்கள். அல்லது ஃபோன் செய்து பணம் வரவழைப்பார்கள். கையை விரிப்பவர்கள் அநேகமாக இல்லை என்றே கூறிவிடலாம்" என்றார் ஒரு நட்சத்திர ஓட்டலின் லாபி மானேஜர் கிஷன்.

"ஒருவர் பில்லுக்குப் பணம் தரவில்லையென்றால் போலீஸை அழைப்பீர்களா?"

"போலீஸில் பிடித்துக் கொடுப்பது என்பது இருக்கவே இருக்கிறது: ஆனால் அதைவிடப் பொதுமக்கள் முன் ஏற்படக் கூடிய அவமானமே இத்தகைய குற்றங்கள் நடக்காதிருக்கத் தடுப்பு அரணாக விளங்குகிறது" என்றார் ஒரு ஓட்டல் முதலாளி.

— மௌஷ்மி.

படம்: ரமணன்.

# கலப்படத்தைக் கண்டுபிடிப்பது எப்படி?

கல்கத்தாவில் ஒரு நாள் சுமார் எழுநூறு பேர் திடீரென்று பக்கவாத நோயின் தாக்குதலுக்குள்ளாயினர். ஆஸ்பத்திரியில் அவர்களைப் பரிசோதனை செய்த போது, சாப்பாட்டினால் வந்த விளைவுதான் இந்தத் திடீர் நோய்த் தாக்குதல் என்று தெரியவந்தது. அவர்கள் சாப்பிட்ட உணவு பரிசோதனைக்காக ஆய்வுக் கூடத்துக்கு அனுப்பப்பட்டது. பரிசோதனையில் அந்த உணவில் பயன்படுத்தப்பட்ட எண்ணெய்தான் இத்தனைக்கும் மூல காரணம் என்று தெரிந்தது. அவர்கள் அனைவருமே ஒரு குறிப்பிட்ட ரேஷன் கடையில்தான் அந்த எண்ணெயை வாங்கியிருந்தார்கள். நகரமெங்கும் ஒரே பரபரப்பு. அந்த எண்ணெயின் சாம்பிள், ஆராய்ச்சி நிலையத்துக்கு அனுப்பப்பட்டது. அங்கே வெளிப்பட்ட பயங்கரமான உண்மை: சமையல் எண்ணெயுடன், மோட்டார் வாகனங்களுக்கு உபயோகிக்கும் ஓர் எண்ணெயைக் கலப்படம் செய்து ரேஷன் கடை மூலம் மக்களுக்கு விற்கப்பட்டிருக்கிறது!

அரசாங்கம் இது குறித்த விசாரணைக்கு உத்தரவிட்டது. கல்கத்தாவைச் சேர்ந்த நுகர்வோர் அமைப்பு ஒன்று, நீதிமன்றத்தில் வழக்குப் போட்டது. பாதிக்கப்பட்டவர்கள் அனைவருக்கும் தக்க நிவாரணத் தொகை வழங்க நீதிமன்றம் உத்தரவிட்டதோடல்லாமல், கடுமையான பாதிப்புக்குள்ளான ஒரு சிலரை வாழ்நாள் முழுவதும், பராமரிக்க வேண்டிய பொறுப்பையும் அரசாங்கமே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் உத்தரவிட்டது!

மாலை நேரங்களில், சுடச்சுட, பொன் நிறத்தில் ஜிலேபி போட்டு விற்கிற கடையொன்றிலிருந்து எடுக்கப்பட்ட சாம்பிளைப் பரிசோதனை செய்து பார்த்த போது, அரசாங்கத்தினால் தடை செய்யப்பட்ட சில சாயமூட்டும் வஸ்துக்களை உபயோகித்துச் செய்யப்பட்ட ஜிலேபி அது என்பது தெரியவந்தது. இந்தச் சாயங்கள், சாப்பிடுபவர்களின் சிறுநீரகம், மற்றும் கல்லீரலைக் கடுமையாய் பாதிக்கும் என்பது தெரியாமலேயே, 'ஜிலேபி ஜோர்!' என்று சப்புக் கொட்டினவர்கள் எத்தனை பேரோ! இப்படி ஏராளமான சோகக் கதைகள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன.

இன்று கஸ்டமர்களை விடக் கலப்படக்காரர்கள் புத்திசாலிகள்! எதெதனுடன் எதை எதைக் கலப்படம் செய்கிறார்கள் என்று பட்டியல் போட்டால் மாளாது. நல்லெண்ணெய், பாமாயில், கடலையெண்ணெய், கடுகு எண்ணெய் என்று எதை எடுத்தாலும் கலப்படத்துக்குத் தப்புவதில்லை. நெய்யுடன் டால்டாவைக் கலப்படம் செய்கிறார்கள். காப்பிப் பொடியுடன் புளியங் கொட்டையைத் தூளாக்கிச் சேர்க்கிறார்கள். உபயோகப் படுத்திய டீத் தூளுக்குச் சாயம் ஏற்றி, ஒரிஜினல் டீத் தூளுடன் கலந்து விற்பனைக்கு அனுப்பி விடுகிறார்கள். மரத் தூளுக்குச் சாயம் ஏற்றி டீத் தூளுடன் சேர்ப்பதும் உண்டு! கேசரிப் பருப்பு கலப்படக்காரர்களின் கற்பகத்தரு; ஆனால் உபயோகிப்போருக்கு எமதூதன்! மிளகாய்ப் பொடியுடன் செங்கல் பொடி சேர்க்கப்படுகிறது. ஒருவிதப் பிசினைப் பார்த்தால், பெருங்காயம் போலவே இருக்கும். தேன், கோதுமை, வெல்லம், மிளகு, உப்பு, கடுகு என்று எதையுமே இந்தக் கலப்படக்காரர்கள் விட்டு வைப்பதில்லை.

எந்த நிலையில் கலப்படம் நடக்கிறது? பிரபல டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸ் ஒன்றின் சேல்ஸ் மேனேஜர் (பெயர் வேண்டாமே! என்று கேட்டுக் கொண்டார்), "கொள்முதல் செய்யப்பட்ட பின்னர், சில்லறைக் கடைக்கு வருவதற்கு முன்னர்

* பேராசிரியர் சங்கரன்





* கலப்படத்தைக் கண்டுபிடிக்கும் பேராசிரியை கீதா.

எந்தச் சமயத்திலும் கலப்படம் செய்யப் படுவதற்குச் சாத்தியம் இருக்கிறது. பிரபல மான – மக்கள் மனத்தில் நீங்காத இடம் பெற்று விட்ட – பெரிய கடைகளில் கலப் படம் செய்யப்படுவதில்லை. ஆனால் விலை சற்று கூடுதலாக இருக்கும். கிராமப்புறங் களிலும், நகர்ப்புறங்களில் சிறிய கடை களிலும்தான் கலப்படம் செய்யப்பட்ட பொருட்கள் மிகுதியாய்ப் புழங்குகின்றன! ஏழைகள்தான் அதிகம் பாதிக்கப்படுகிறார் கள்" என்றவர் தொடர்ந்து சொன்னார்: "கலப்படம் செய்து விலையைக் குறைக்கும் போது கல்வி அறிவில்லாத எளியோர்தான் ஏமாந்து போகிறார்கள். மலிவாகக் கிடைக் கிறதே என்று வாங்கி விடுகிறார்கள். ஆனால் கலப்படப் பொருள்கள் சாப்பிடு பவருடைய ஆரோக்கியத்தைப் பாதித்துப் பொருளை வாங்கும் போது மிச்சமான பணத்தை விடப் பல மடங்கு அதிகமாக மருத்துவச் செலவை ஏற்படுத்தி விடுகின் றன.

**க**லப்படத்தைத் தடுக்க முடியாதா? "ஓ! அதற்குச் சட்டமே இருக்கிறது. மாநகராட்சியின் சுகாதார அதிகாரிகள் கடைகளிலிருந்து மாதிரி எடுத்துச் சோத னைக்கு அனுப்புகிறார்கள். அந்தச் சோத னையில் அந்தப் பொருள்கள் கலப்படமா னவை என்று நிரூபணமானால், கோர்ட்டில் கேஸ் போடுவார்கள். கோர்ட்டில் கேஸ் போட்டால், எத்தனை நாளுக்கு இழுத்துக் கொண்டு போகும் என்பது தெரிந்தது தானே!" என்கிறார் ஒரு வக்கீல்.

இவர் நினைவுகூறும் ஓர் உண்மைச் சம்பவம்: ஒரு ரசாயன ஆசிரியர் தாமே பரிசோதனை செய்து கலப்படம் என்று அறிந்து ஒரு கடை பற்றி மாநகராட்சி சுகாதார அதிகாரிக்குப் போன் செய்தார். சில தினங்கள் சென்று மறுபடி தொடர்பு கொண்ட போது, சம்பந்தப்பட்ட சுகாதார அதிகாரி, குறிப்பிட்ட கடையைச் சோதனை யிட்டதாகவும், கலப்படம் ஏதுமில்லை என்றும் கூறி விட்டார்! "அதிகாரி வரும் போது கலப்படப் பொருள் மறைக்கப்பட் டிருக்கலாம். அல்லது லஞ்சமும் காரணமா யிருக்கலாம். இவற்றையும் மீறி நேர்மை யான அதிகாரிகள் கலப்படக் கேஸ் போட் டால், அரசியல் சிபாரிசுகள் காரணமாய்க் கேஸ் ஒன்றுமில்லாமல் போய் விடுவதும் உண்டு!" என்கிறார் அந்த வழக்கறிஞர்.

"**இ**ன்று நிலைமை மாறியுள்ளது நுகர்வோர் பாதுகாப்புச் சட்டம் நிறைவேற்றப்பட்டு விட்டது. அதன்படி, பொது மக்கள் எவரும், கலப்படம் இருக் குமோ என்று சந்தேகப்பட்டால், அவர்களே உடனடியாக நேரடி நடவடிக்கை எடுக்க லாம்" என்று கூறுகிறார் தென் சென்னை நுகர்வோர் அமைப்பின் தலைவரான தேசிகன். அவர் இது பற்றி விளக்கம் தரு கிறார்:

"உதாரணமாய், நெய் வாங்குகிறீர்கள். அதிலே கலப்படம் இருக்கும் என்று சந்தேகப்பட்டால், வாங்கிய நெய்யின் மூன்று சாம்பிள்களை எடுத்து ஒன்றைக் கடைக்காரரிடம் கொடுத்து விட்டு, இன்னொன்றை நீங்களே வைத்துக் கொண்டு, மூன்றாவதை கிண்டி, கிங் நிலையத்துக்கோ மாநகராட்சி சோதனைக் கூடத்துக்கோ அனுப்பி வைக்கலாம். அந்த ரிப்போர்ட்டுடன் நுகர்வோர் கோர்ட்டுக்குப் போகலாம். நுகர்வோர் கோர்ட்டுக்கு, உங் களைப் பற்றின விவரம், விலாசம், வாங்கிய பொருள் அதை விற்ற கடையின் அல்லது கடைக்காரரின் முகவரி, வாங்கிய தேதி முதலிய விவரங்களைக் குறிப்பிட்டுப் புகார் தர வேண்டும். நுகர்வோர் நீதிமன்றம், விசாரித்துக் கலப்படப் பேர்வழிக்குத்

தண்டனை வழங்கும்!''

''கலப்படம் செய்யப்பட்ட பொருள்களை கடைக்காரர்கள் தெரிந்தேதான் விற்பனை செய்கிறார்களா? 'எங்களுக்கே தெரியாது சார்! வருகிற சரக்கை, வாடிக்கையாளர்களுக்கு விற்கிறோம். ஏதாவது குற்றம் குறை என்றால், சரக்கு சப்ளை செய்பவரிடம் கேளுங்கள்' என்று மளிகைக் கடைக்காரர் கூறினால்?''

''சட்டப்படி பார்த்தால், கலப்படம் செய்கிறவர் மட்டுமின்றி, கலப்படப் பொருளை விற்கிறவரும் கூட குற்றவாளியே!'' என்கிறார் தேசிகன்.

கலப்படம் பற்றின லயோலா கல்லூரி ரசாயனப் பேராசிரியர் சங்கரனின் கண்ணோட்டம், முற்றிலும் வித்தியாசமாக உள்ளது. ''கடையில் வாங்கும் பொருள் கலப்படம் என்று சந்தேகப்பட்டால், சாம்பிள் எடுத்துச் சோதனைக்கு அனுப்பி, நுகர்வோர் கோர்ட்டுக்குப் போய்... அதெல்லாம் எல்லோராலும் முடிகிற காரியமா? அதை விட அப்படிப்பட்ட கடைகளில் இனி எந்தப் பொருளையும் வாங்குவதில்லை என்று நீங்களும் உங்கள் நண்பர்களும் பகிஷ்கரிப்பது சுலபம்தானே!'' என்கிறார் சங்கரன். ''ஒரு பேட்டையில் அல்லது ஒரு தெருவில் இருப்பவர்கள் ஒரு கடையைப் பகிஷ்கரித்தால் வியாபாரம் படுத்து விடாதா? இதுவே மற்ற கடைக்காரர்களுக்கும் எச்சரிக்கையாக அமையும் அல்லவா!'' இவரும், ஸ்டெல்லா மேரீஸ் கல்லூரியின் வேதியியல் பேராசிரியர் கீதாவும் சேர்ந்து கலப்படத்தைக் கண்டுபிடிக்க ஓர் எளிய உபகரணத்தை வடிவமைத்துள்ளனர்.

ஒரு பெட்டியில் எட்டு பாட்டில்களில், எட்டு விதமான திரவங்கள் உள்ளன. (இவற்றுக்கு வரிசை எண்கள் தரப்பட்டுள்ளன) அதனுடன் ஒரு இங்க் ஃபில்லர், சில சோதனைக் குழாய்கள், ஒரு லென்ஸ், ஒரு கண்ணாடித் தட்டு, சில லிட்மஸ் தாள்கள் இவையும் உள்ளன. கடுகில் தொடங்கி காப்பித் தூள் வரை எல்லாப் பொருட்களிலும் கலப்படத்தை இந்த திரவங்களில் ஏதாவது ஒன்றைப் பயன்படுத்திக் கண்டுபிடித்து விடலாம். எந்தப் பொருளுக்கு, எந்தத் திரவத்தைப் பயன்படுத்த வேண்டும் என்கிற விவரமும் தனித் தாளில் தரப்படுகிறது.

பேராசிரியை கீதா கூறுகிறார்: ''இந்த ரசாயனத் திரவங்கள் அனைத்தும் அபாயமில்லாதவை. இந்தச் சோதனைகளும் மிக மிக எளிமையானவை. இரசாயன அறிவு துளியும் இல்லாத குடும்பத் தலைவிகள் கூட மிகவும் சுலபமாய்ச் சோதனை செய்து, கலப்படத்தைக் கண்டுபிடித்து விடலாம்.

''உதாரணத்திற்குப் பருப்பில் ஏதாவது கலப்படமா என்று கண்டுபிடிக்க வேண்டுமானால், சோதனைக் குழாயில் சிறிது

## பாச நெஞ்சம்
## அறியுமே
## குழந்தைக்குத்
## தேவை என்னவென்று!

குழந்தைகள் குறிப்பாக படிக்கும் காலங்களில் அவர்களை ஆரோக்கியத் தகுதியோடு வைத்துக் கொள்வது அவசியம். புரதச் சத்துக்களிலேயே தலைசிறந்த பால் புரதம் 20% கொண்டது காம்ப்ளான். அது தவிர, மேலும் கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின்கள் மற்றும் தாதுக்கள் போன்ற 22 ஆதார உட்டச்சத்துக்களும் காம்ப்ளானில் உள்ளன—குழந்தைகளின் கூடுதல் போஷாக்கிற்காக-துவங்குங்கள் உங்கள் குழந்தைகளுக்கு காம்ப்ளான்—அன்றாடம் இருவேளை.




23
மூலாதார
சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்
பால் சேர்க்கத் தேவையில்லை

**காம்ப்ளான்®**
திட்டமிட்ட பரிபூரண உணவு

# திட்டமிட்ட பரிபூரண உணவு.

GX/59/202 TAM R

பருப்பைப் போட வேண்டும். பிறகு, பருப்புக்கான திரவம் எது என்று கொடுக்கப்பட்ட குறிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளதோ, அதில் இங்க் ஃபில்லர் மூலம் இரண்டு சொட்டுகள் எடுத்துச் சோதனைக் குழாய்க்குள்ளிருக்கும் பருப்பின் மீது விட வேண்டும். அப்படிச் செய்யும் போது, பருப்பு ஏதாவது நிறமாற்றமடைகிறதா, என்ன நிறம் போன்றவற்றைக் கவனித்து, மற்றொரு அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ள குறிப்புகளின்படி என்னென்ன மாற்றத்திற்கு என்னென்ன கலப்படம் என்பதை ஒப்பிட்டுக் கண்டுபிடித்து விடலாம்.

''மிளகுக்கு வெறுமனே லென்ஸ் போதும். சிறிதளவு மிளகை லென்ஸ் மூலம் உருப்பெருக்கம் செய்து பார்த்தால் பப்பாளி விதைகள் போன்றவை கலக்கப்பட்டுள்ளனவா என்பது சுலபமாகத் தெரிந்து விடும்!

''இந்தச் சாதனத்தை ஒரு தடவை வாங்கி விட்டால், இரண்டு வருடங்களுக்குப் போதுமானது; நாலைந்து குடும்பங்கள் ஒன்று சேர்ந்து கூட வாங்கிப் பயன்படுத்தலாம். விலை அதிகமில்லை. ரூ. 125 தான்'' என்கிறார் கீதா.

ஆயினும் இது இன்னமும் வியாபார ரீதியாக விற்பனைக்கு வரவில்லை. தொழிலார்வம் கொண்ட யாராவது இதில் ஈடுபட்டால் நல்லது. அல்லது அரசாங்கமே நுகர்வோர் பாதுகாப்புக் குழுவின் ஒத்துழைப்புடன் இதன் தயாரிப்புக்கும் விற்பனைக்கும் வழிவகுக்கலாம்.

பேட்டி, கட்டுரை: **எஸ். சந்திரமௌலி**

மேலட்டை வண்ணப்படம், படங்கள்: **யோகா**




யோசனை தெரிவித்த வாசகர்:
இரா. செண்பகராஜ்,
காரைக்குறிச்சி.

## 'தினார்' என்பது என்ன?




●● அரேபிய நாடுகளில் தங்க நாணயங்களைத் 'தினார்' என்றும், வெள்ளி நாணயங்களைத் 'திர்ஹம்' என்றும் அழைக்கின்றனர்.

இரண்டு வார்த்தைகளுக்கும் அர்த்தம் என்ன தெரியுமா?

தினார் — நரக நெருப்பு!

திர்ஹம் — துன்பத்தின் வாசல்!

பணத்தாசை குறித்து எச்சரிக்கத்தான் பணத்திற்கு இப்படிப் பெயரிட்டார்களோ?

தகவல்: தக்கோலம் புகாரி.

●● மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த லக்கி ஹாஃப்மெய்ர் என்பவர் ரீகன்ஸ் பர்க்கிலிருந்து மியூனிச் வரை 132 கிலோ மீட்டர் தூரத்தைக் கால்களை உயரே தூக்கிக் கொண்டு கைகளைத் தரையில் ஊன்றி நடந்தவாறு கடந்துள்ளார். அவருடைய பயணத்தின் போது இருபது ஜோடிக் கையுறைகள் தேய்ந்துவிட்டன.

1900 ஆண்டில் ஜோஹன் ஹஸ்லிங்கர் என்பவர் வியன்னாவிலிருந்து பாரீஸுக்குக் கைகளை ஊன்றியவாறே கடந்து சென்ற சாதனையின் தூர அளவு இன்னும் முறியடிக்கப்படவில்லை.

— தெ. சுந்தரமகாலிங்கம்.

●● அகமதாபாத்தில் ஆண்டுதோறும் பொங்கல் அன்று கோலாகலமாக நடைபெறும் காற்றாடித் திருவிழாவைக் காண உலகெங்கிலுமிருந்து பார்வையாளர்கள் வந்து குழுமுகிறார்கள். அங்கு நகராட்சி நடத்தும் ஒரு நிரந்தரமான காற்றாடி மியூசியமே இயங்குகிறது. விழாவில் புராண, சரித்திர புருஷர்கள் மற்றும் கழுகு, வௌவால், வண்ணத்துப்பூச்சி, லாந்தர் விளக்கு, மீன் எனப் பலவித உருவங்களில் காற்றாடிகள் தயாரிக்கப்பட்டு, அவை ஒரே நேரத்தில் வானத்தில் சஞ்சரிப்பது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

நன்றி: 'ஹிந்து'

தகவல்: அ. ஷண்முகசுந்தரம்.

●● என் நண்பனும் நானும் பேருந்து ஒன்றில் பயணம் செய்து கொண்டிருந்த போது, ஒரு நிறுத்தத்தில் வயதான பெண்மணி ஒருவர் ஏறி, நிற்க முடியாமல் தவித்தார். அதைப் பார்த்துப் பஸ்ஸில் இருந்த ஓர் இளைஞர், தாம் நின்று கொண்டு, அப்பெண்மணியை அமரச் செய்தார். உடனே எனது நண்பன், ''ஸார், உங்களை மாதிரி நல்லவர்கள் இருப்பதால்தான் நாட்டில் கொஞ்சமாவது டீசலும், பெட்ரோலும் கிடைக்கிறது!'' என்றானே பார்க்கலாம்! பேருந்தில் ஒரே சிரிப்பும், கும்மாளமும்தான்.

— முருகானந்தம்.

# ஓர் அ.தி.மு.க. ஆதரவாளரின் நியாயமான குழப்பங்கள்!



எதிர் வீட்டிலிருக்கும் நண்பர் நீலமேகம் ஓர் அ. தி. மு. க. ஆதரவாளர்.

கொஞ்ச நாளாக அவர் தெருவில் நடக்கும் போது தமக்குத் தாமே பேசிக் கொண்டு செல்வதைக் கவனித்தேன். நடந்து கொண்டேயிருப்பவர் தட்டாலென்று நின்று விடுவார். பிறகு கையை மோவாயில் வைத்துக் கொண்டு யோசிப்பார். ஒரு மாதிரி சிரித்துக் கொள்வார். மறுபடி ஏதோ பேசிக் கொள்வார். கரும்பலகையில் எழுது வது போல என்னவோ கூட்டி, கழித்து, பெருக்கல் வேலைகளை விரலால் செய்வார். அதெல்லாம் சரியானதல்ல என்று அழிப்பார்.

அவரது மனைவி என் மனைவியிடம் வந்து றைப்பட்டுக் கொண்டாள். ''உங்க வீட்டுக்காரரண்டை கொஞ்சம் சொல்லி எங்க வீட்டுக்காரர்கிட்டே பேசச் சொல்லுங்க. மனசு விட்டு என் கணவர் யார் கிட்டேயாவது பேசினால்தான் அவரை இப்போ பிடித்திருக்கின்ற வியாதி நீங்கும் போலிருக்கு,'' என்று கேட்டுக் கொண்ட தன் பேரில் நீலமேகத்துடன் பேசுவது என்று தீர்மானித்தேன்.

எனக்கு அரசியல் ஞானம் அடியோடு கிடையாது என்பதை முன்கூட்டியே தெரிவித்துக் கொள்கிறேன். ஆனாலும் ஒரு மனித நேய உறவுக்காக நீலமேகத்திடம் பேசத் துணிந்தேன்.

அவரது வீட்டுக்குப் போன போது பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார். படிக்கும் போது தமக்குத் தாமே பேசிக் கொள்ளாதது எனக்குப் பெரும் ஆறுதலாயிருந்தது. ஆசாமி நான் நினைத்த மாதிரி அவ்வளவு முற்றிய கேஸ் அல்ல.

''வணக்கம் சார்.''

''அடடே.. வாங்க வாங்க... காமாட்சி! எதிர் வீட்டு சார் வந்திருக்கிறார் பார். காப்பி கொண்டு வா'' என்று உபசரித்ததும் எனக்குச் சந்தோஷமாகி விட்டது. நீலமேகம் முற்றிலும் ஒரு நல்ல உருப்படிதான்.

ஆனால் நேற்றுக் கூடத் தெருவில் நடக்கும் போது தமக்குத் தாமே பேசிக் கொண்டு தானே நடந்தார்?

காப்பி சாப்பிட்டபடியே, ''என்ன அரசியல் நிலைமையெல்லாம் எப்படி இருக்கு? தேர்தல் வரப் போகுது போலிருக்கு?'' என்றேன்.

நீலமேகம் நாளிதழை மடித்துக் கீழே வைத்தார். ''நமக்கேனுங்க மத்தவங்க கட்சி நிலவரங்கள்? எங்க கட்சியைப் பற்றிக் கேளுங்க. தெளிவாச் சொல்றேன்.''

''சொல்லுங்க. நீங்க அ. தி. மு. க. விலே தானே இருக்கீங்க?''

''நாம எண்ணெய்க்குமே (நண்பர் எண்ணெய் கிடைக்காத இந்தக் காலத்திலும் 'எண்ணெயை'த்தான் அதிகம் பயன்படுத்துவார்.) அ. தி. மு. க. தாங்க! அதிலே எந்தப் பிரிவுங்கறதைத்தான் எண்ணெயால தீர்மானிக்க முடியலீங்க.''

''சொல்லுங்க.''

''நான் எம். ஜி. ஆர். ஆளுங்க. எண்ணெய்க்குமே எம். ஜி. ஆர். தாங்க எனக்குத் தெய்வம்.''

''வாஸ்தவமான பேச்சு.''

''அவர் இறந்த சமயம் மூணு நாள் மயக்கமாக் கிடந்தேன். எண்ணெயண்டை அப்புறமாச் சொன்னாங்க.''

''அடாடா, த்சொ... த்சொ..''

''சொல்றேனேன்னு எண்ணெயைத் தப்பா நினைச்சிக்காதீங்க. புரட்சித் தலைவரு எண்ணெய்க்குக் காலமானாரோ அண்ணையிலிருந்து எனக்குக் குழப்பம் தானுங்க...''

தலைவனை இழந்தாலே குழப்பம் வரத் தானே செய்யும்.

''நறுக்குனு நல்லா ஒரு வார்த்தை சொன்னீங்க. தலைவரு மறைஞ்சதும் ஜானகியம்மா — நெடுஞ்செழியன் தகராறு வலிச்சுக்கிட்டாங்களா? நான் அம்மா கட்சி

பா. ரா.

யிலிருந்தேன். அம்மா தோற்றுட்டதும் ஆடிப்பூட்டேன். அப்புறம் செல்வி ஜெயலலிதாம்மாவுக்கும் நெடுவுக்கும் தகராறு முட்டிக்கிச்சா? நான் நெடுவை ஆதரிச்சேன் — ஸீனியர் ஆளாச்சே. எண்ணெயக்குன்னாலும் ஸீனியர்னா கொஞ்சம் விவகாரம் தெரிஞ்ச மனுஷனாத்தானே இருப்பாருன்னு. ஆனா தேர்தல்லே அவுரு நின்னு டெபாசிட்டே பூடுச்சி. அவரு மெதுவா ஏரைக் கட்டிக்கினாரா? மண்ணுக் குதிரையை நம்பினமேன்னு வருத்தப்பட்டு இப்ப செல்வியை ஆதரிச்சேன்.

''செல்விக்கும் திருநாவுக்கரசுக்கும் லடாய் வந்துடுச்சிங்களா?. திருவை ஆதரிச்சேன். அடிக்கடி நடமாட்டம் அவர்கிட்டே இருந்திச்சு. சட்டசபைக்கெல்லாம் வந்துகினு போய்க்கினு கேள்வி வுட்டுகினு சவுண்டு கொடுத்துக்கிட்டிருந்தாரேன்னு அவர் பின்னாடி போனேனா?

''திருநாவு இன்னா செய்தாரு? மறுபடி ஜெயலலிதா கட்சிக்கே திரும்பிட்டாரு. இவுங்கதான் என் தலைவின்னு ஒட்டிக் கிட்டாரா? நானும் செல்வி கட்சியை ஆதரிச்சேன். அதுக்குள்ளாற திருவுக்கும் செல்விக்கும் அடுத்த லடாய் வந்து, செல்வி திருவை வெளியேற்றிட்டாரு.

''இன்னாடாது ரோதனைன்னு நடுநிலையிலே இருந்தேன். அப்புறம் திருநாவு, பண்ணுருட்டி எல்லாம் சேர்ந்து ஒரு அ. தி. மு. க. ஆரம்பிச்சாங்களா? திரு. அ. தி. மு. க., ஜெய. அ. தி. மு. க.ன்னு சொல்லிக்கிட்டாங்க. தடால்னு அ.தி.மு.க. ரெண்டுன்னு திரு. அ. தி. மு. க. பெயரை மாற்றினாங்க. நமக்குக் கொஞ்சம் குழப்பம். சமாளிச்சிக்கிட்டு அ. தி. மு. க. ரெண்டுன்றதை ஆதரிச்சேன். அ. தி. மு. க. ரெண்டுலேருந்து மறுபடி சாத்தூரார் அவுங்க இவுங்க ஜெயலலிதா அ. தி. மு. க. வுக்கே மறுபடி போகப் போறதாகப் பேச்சு அடிபடுது. திருநாவு தனியா இருப்பாரா, மறுபடி அவரும் செல்வி கட்சிக்கே போயிடுவாரா? நாம கட்சியை ஆதரிக்கிற ஆளா, ஆளை ஆதரிக்கிற ஆளா? தனிப்பட்ட ஆளின் பின்னாடியே போவறதா? கட்சி பின்னாடி போறதா? கட்சின்னா ஆளா? ஆளுன்னா கட்சியா?

''பண்ணுருட்டியையும் திருநாவையும் விட்டுட்டு மத்தவங்களையெல்லாம் அ. தி. மு. க. விலே சேர்த்துடணும்னு காங்கிரஸ்காரங்க முயற்சி பண்றாங்களாம். திருநாவு தி. மு. க. வி.லே சேர்ந்துரலாங்கறாங்க. எண்ணெய்க்குமே நான் தி. மு. க. கட்சி இல்லை. திருநாவு தி. மு. க. வுக்குப் போனார்னா நானும் தி. மு. க. வை ஆதரிக்கணுமா? அப்படி நான் ஆதரிக்காட்டி எந்த அ. தி. மு. க. வை நான் ஆதரிக்கிறது? எனக்கு அ. தி. மு. க. விலே திருநாவு, நெடு, பண்ணு, சாத்தூர் எல்லார்கிட்டேயும் மதிப்பு உண்டு. செல்வியை மட்டும் ஆதரிக்கிறதுன்னா மனச்சாட்சி இடம் தர மாட்டேங்குது. திருநாவு எப்படி உழைச்சார். அப்புறம் வெளியேறினார். அப்புறம் சேர்ந்தார். அப்புறம் வெளியேறினார்...

''அந்த அம்மா கரெக்டா இருந்தா அவரு வெளியேறியிருப்பாரா? அவரு கரெக்டா இருந்தால் அந்தம்மா தள்ளியிருப்பாங்களா...? அ. தி. மு. க. வை ஆதரிக்கலாம்னா, அதுவும் காங்கிரசும் ஒண்ணா இருக்குது. எண்ணெய்க்குமே எண்ணெய்ப் பொருத்தவரையிலே காங்கிரசு நமக்குப் புடிக்காது. தி. மு. க. வும் புடிக்காது. நான் எம். ஜி. ஆர். ஆளு. அ. தி. மு. க. ஆதரவுக்காரன். ஆனால் எந்த அ. தி. மு. கன்னு தான் புரிபடலே. நான் யாரை ஆதரிக்கறது? நீங்க என்ன நினைக்கிறீங்க?''

''யோசித்துச் சொல்கிறேன்,'' என்று வீட்டுக்கு வந்து விட்டேன்.''

நாலைந்து நாள் யோசித்தேன். ஐந்தாம் நாள் மனைவி சொன்னாள்:

''உங்களைப் பற்றித் தெருவே சிரிக்கிறது. ரோடிலே போகிற போது உங்களுக்கு நீங்களே பேசிக்கிறீங்களாம். நடக்கிற போது தடால் தடால்னு தெருவிலே நின்னு நெற்றியைப் பிடிச்சு விட்டுக்கிறீங்களாம்.''

''நீலமேகத்துக்கு ஏதாவது சொல்லணுமே...'' என்றேன் ஈனசுரத்தில்.

''நீங்க இனிமேல் அவர் வீட்டுப் பக்கமே போக வேண்டாம். அவர் யாரையோ ஆதரித்துக் கொண்டு எப்படியோ போகட்டும்,'' என்றாள் மனைவி. எனக்கும் அப்பாடா என்று நிம்மதியாயிற்று.



### அடுத்த இதழில்...

- ●● காப்பகத்தில் குழந்தை அம்மாவுக்கு ஏங்குமா...?
  — கவர் ஸ்டோரி
- ●● திருப்புட்குழி
  — திருவருள் பொழியும் திவ்யஸ்தலம்

மூச்சுக்கு புதுமணம் ப்ராமிஸ், பல்லுக்கு ஆரோக்கியம் ப்ராமிஸ்.



இதுதான் ப்ராமிஸ்
டூத்பேஸ்ட்டின் பெருமையே.

ப்ராமிஸ் டூத்பேஸ்ட்டில் இரு செயல் புரியும் கிராம்பு எண்ணெய் அடங்கியுள்ளது. இது பல் இடுக்குகளில் புகுந்து பற்களின் வேர்களை மேலும் கிருமிகளை அகற்றுகிறது. தவிர சுவாசத்தில் துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை ஒழித்து மூச்சுக்குப் புதுமணமூட்டுகிறது. கிராம்பு எண்ணெய் அடங்கிய டூத்பேஸ்ட் ப்ராமிஸ்



BALSARA
பல்ஸாரா— டூத்பேஸ்ட் நிபுணர்கள்.

**Promise**



CHAITRA-B BLS 951 TAM

போகட்டும் 5 கிராமங்கள் கொடுக்காவிட்டாலும் பரவாயில்லை
நாகார்ஜுனா சிமிண்டினால் கட்டிய 5 வீடுகளாவது
கொடுத்தால் போதும் என்கிறார் மகாராஜா.

MAM/NCL/T/104

CL·INDUSTRIES LIMITED ☎ 237481, 234548
FLOOR, RAGHAVA RATNA TOWERS
IRAG ALI LANE, HYDERABAD-500 001. INDIA
AMS : ENCIELIND, TELEX : 0425-6887 NCLH-IN

# ...தேர்தல் அரங்கம்...

புரட்சித் தலைவர் ஆட்சி
மறுபடி மலரணும்...
புரட்சித் தலைவி
சொல்றேன்...

சிலுவை சுமக்கிறேன்...
அறைஞ்சிடாதீங்க.
இறக்கி வைக்கப்
பாருங்க...

தேர்தல்ல
நிக்கவும் வேணாம்...
ராம்.ராஜ்.ரா.
பதவியும்
வேணாம்...

ராஜீவ்
வேணுமா...
இந்திரா
வேணுமா...
கரு வேணுமா...
நாம என்ன
வேணும்
போடறது?

புடிச்சிட்டேன்,
புடிச்சிட்டேன்,
புலியைப் புடிச்சிட்டேன்...

ஹூம்... நான் புடிக்காத
புலிகளா...?




# கல்கி

1991 பிப்ரவரி 24
மலர் : 49 இதழ் : 30
பிரமோதூத மாசி 12




## ஒளிக்கீற்று விடியலாக மலரட்டும்!

**ப**யங்கரமான இருட்டுக்கு இடையே ஒரு சிறு ஒளிக்கீற்று. அது விடியலா, அல்லது நமது ஏக்கத்தின் பிரதிபலிப்பாகக் கண்கள் நம்மை ஏமாற்றுகின்றனவா?

சத்தாம் உசேன் குவைத்திலிருந்து தாம் வெளியேறத் தயாராக இருப்பதாகக் கூறியுள்ளார். ஆனால் கூடவே பல நிபந்தனைகளையும் விதித்திருக்கிறார். முன்னது ஐ. நா. சபைத் தீர்மானங்களுக்கு உகந்த ஒன்று என்றாலும் பின்னது முற்றிலும் முரணானது. எனவே அமெரிக்கா இதனைச் சந்தேகக் கண்களுடன் பார்க்கிறது. 'சத்தாம் உசேன் ரொம்பத்தான் அடிவாங்கி ஆடிப் போயிருக்கிறார்; அதனால் அமைதி விரும்புகிறவர் போல் காட்டிக் கொண்டு தம்மை மேலும் நிலைப்படுத்திக் கொள்ள அவகாசம் தேடுகிறார்' என்பதாக ஓர் ஐயம்.

'குவைத்தை ஆக்கிரமித்தவர் உசேன்; எனவே அவர் நிபந்தனையின்றி வாபஸ் ஆவதே முறை' என்று கருதுகிறது அமெரிக்கா. உசேனுக்கோ இது கௌரவப் பிரச்னை. 'தோற்றுப் போனதாகக் காட்டிக் கொள்ளாமலேயே வாபஸ் பெற முடியுமானால் நல்லது' என்று எண்ணுகிறார்.

சிக்கல்தான். என்றாலும் அறுப்பது ஒன்றுதான் வழி என்று கருதக் கூடாது. விடுவிக்க முயல்வதே விவேகம். இப்போது தோன்றியுள்ள சிறிதளவு நம்பிக்கையை மேலும் வளர்த்து, அமைதிக்கும் குவைத்தின் விடுதலைக்கும் வழிவகுப்பதே நல்லது. இதைத்தான் நல்லெண்ணத்துடன் வேறு பல நாடுகளும் கூறுகின்றன.

'அமெரிக்கா செவிசாய்க்கட்டும்; சதாம் உசேனும் இன்னும் கொஞ்சம் இறங்கி வரட்டும்' என்று உலகம் பிரார்த்திக்கிறது. குறிப்பாக இஸ்ரேல் பிரச்னையை இதில் கொண்டு வந்து உசேன் பிணைப்பதை விட்டு விட்டாலே போதும், அமைதிக்கு ஒரு மகத்தான முன்னேற்றம் ஏற்பட்டு விடும். ஒரு பாவமும் அறியாத மக்கள், தலைவர்களின் மூடப் பிடிவாதத்தால் மடிவது தவிர்க்கப்படும்.

போர் என்று வந்து விட்டாலே நேரடியாகவும் பொருளாதார ரீதியில் மறைமுகமாகவும் மிக அதிகமாகப் பாதிக்கப்படுகிறவர்கள் சாமானியர்தான். அதுதான் இப்போதும் நடக்கிறது. அமெரிக்காவின் முன்னாள் அரசு வழக்கறிஞர் ஈராக்கில் சுற்றுப்பயணம் செய்து விட்டு, அமெரிக்கா உள்ளிட்ட பன்னாட்டுப் படைகளின் தாக்குதலை வன்மையாகக் கண்டித்திருக்கிறார். போர் இலக்குகளை மட்டுமின்றி, மக்களின் குடியிருப்புக்களை, பால் பாக்கெட் நிறுவனங்களை, மின்சாரம் — குடிநீர் வழங்கு நிலையங்களை குண்டுகளால் தகர்த்திருப்பதைச் சுட்டிக்காட்டி, 'இவை அத்து மீறிய செயல்கள்; ஐ. நா. வின் அனுமதி பெறாத அராஜகங்கள்' என்று வர்ணித்திருக்கிறார். இது ஒரு புறம் விசனத்தையும் மறுபுறம் அமெரிக்கர்களின் சுதந்திர சிந்தனை குறித்த பெரு வியப்பையும் மரியாதையையும் நம்மிடம் ஏற்படுத்துகின்றன. ஏராளமான அப்பாவி ஈராக்கிய மக்கள், பச்சிளம் குழந்தைகள் உள்பட, இறந்து போயிருக்கிறார்கள். காயமடைந்தவர்களோ, 'செத்திருந்தாலே தேவலாம்' என்று எண்ணுமளவுக்கு வேதனை அனுபவிக்கிறார்கள்.

"யார் கண்டது? நீ அட்டை டாங்குகளை நிறுத்தி அசல் என்று என்னை ஏமாற்றியது போல், பால் நிறுவனம் என்று வெளிப் பார்வைக்குக் காட்டி உள்ளே ஆயுதக் கிடங்கை வைத்திருக்கலாம்" என்பது போல் அமெரிக்கா வாதம் புரிகிறது. போர் விமானிகள் ஆரம்பத்தில்தான் ரொம்பப் பொறுப்புணர்வுடன் இருப்பார்கள். போகப் போக விரக்தியும் ஏமாற்றமும் அவர்களைக் கண்மூடித்தனமாகத் தாக்கச் செய்துவிடும். போர் வெறி ஆட்கொள்ளும் போது சிந்தனை செயலற்றுப் போகும்.

யுத்தம் என்றாலே இப்படித்தான். ஆரம்பத்தில்தான் தர்மயுத்தமாக இருக்கும்; போகப் போக அதர்மமே அதிக அளவில் புகுந்து கொள்ளும். போர்த் தந்திரங்கள் முக்கியத்துவம் பெறும். மகாபாரதப் போரில் தொடங்கி இன்று வரை நடப்பதுதான். சரித்திரத்தில் படிக்கவில்லையா? இலக்கியங்களில் பார்க்கவில்லையா? வியட்நாமில் மடியாத மக்களா? அமைதிப்படை பற்றிக் கூட நாம் கசப்பான உண்மைகளைக் கேள்விப்படவில்லையா?

எனவே, 'போர் இப்படி நடக்கிறதே, அப்படி நடக்கிறதே' என்று புலம்பிப் பயனில்லை. அதில் யதார்த்தப் பார்வை இல்லை. போர் மூளாமல் இருக்க முயற்சி எடுக்க வேண்டும். அதில் தவறி விட்டால், முடிவுக்குக் கொண்டு வர முயற்சி மேற்கொள்ள வேண்டும். அமெரிக்கா வென்றாலும் அதர்ம வழியில் வென்றதாகத் தீராப் பழி நிலைக்கும். ஈராக் வெற்றி பெற்றாலும் அது குவைத்தை ஆக்கிரமித்துள்ள அக்கிரமம், தொடர்ந்து வன்மையான கண்டனத்துக்குள்ளாகும். எனவே 'வெற்றி என்பது இருவர் பக்கமும் இல்லை' என்பதை உணர்த்தி, போர் நிறுத்தத்துக்கும், குவைத்தின் விடுதலைக்கும் உலக நாடுகள் முயற்சி செய்வது ஒன்றே வழி.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

50

# ஆட்சியைக் கலைத்தது கலைத்ததுதான்!




● தி. மு. க. அரசு கலைக்கப்பட்ட மறு நாள் காலையில் நான் யோகாசனம் செய்து கொண்டிருக்கும் போது என்னைப் பார்க்க என் நண்பன் வந்தான். என்னைச் சிரசாசன நிலையில் பார்த்ததும், ''நீ என்னதான் தலைகீழா நின்னாலும் கலைச்சது கலைச்சதுதான். ஒண்ணும் பண்ண முடியாது. மனசைத் தேத்திக்கிட்டு எழுந்து வா,'' என்றானே பார்க்கலாம்!''

— ந. ஆ. ஸ்ரீனிவாசன், சென்னை — 94.

● ● ●




அரசு உதவி பெறாத எங்கள் உயர்நிலைப் பள்ளியில் ஒவ்வொரு மாதமும் ஐந்தாம் தேதிக்குள் பீஸ் கட்ட வேண்டும். ஒரு சமயம் பதினைந்து தேதியாகியும் சம்பளம் கட்டாத மாணவர் குறித்து எழுத்தர், தலைமையாசிரியரிடம் தெரிவித்தார். தலைமையாசிரியர் பியூனை அனுப்பி ஒவ்வொரு வகுப்பிலும் சம்பளம் கட்டாதவர்களைத் தன்னைக் காண வரச் சொன்னார்.

சற்று நேரம் கழித்து எங்கள் தமிழாசிரியர், தலைமையாசிரியர் அறைக்கு வந்தார். என்னை வரச் சொன்னீர்களா? என்று கேட்க, தலைமை ஆசிரியர் 'இல்லையே' என்றார். தமிழாசிரியரோ, ''சம்பளம் கட்டாதவர்களை'' வரச் சொன்னீர்களாமே! என்று சொல்ல, த. ஆ. கொஞ்சம் வழிந்து கொண்டே சிரித்துச் சமாளித்தார்!

— எஸ். மேனகா, கும்பகோணம்.

● ● ●



நிருபர்: ஏம்மா... தங்களைத் திடீர்னு தமிழக முதல்வராக அறிவித்தால் என்ன செய்வீங்க...?

ஒரு பெண்: யாவரும் அறியக் 'கருத்தடை ஆபரேஷன்' செய்து கொண்டேன் என்று முதல் அறிக்கை விடுவேன். ஏனென்றால் அடிக்கடி 'கலைத்து விடுவேன்,' 'கலைத்து விடுவேன்' என்று என்னைப் பயமுறுத்த முடியாது பாருங்க...!

— பாலகிருஷ்ணன்ஜி, சங்கமங்கலம்.

● ● ●

பட்டிமன்றம் இரவு பத்து மணிக்கு மேல் அப்படி, இப்படி நடந்து கொண்டிருக்கவும் சலிப்புடன் சிலர்

..இந்த ஊர் ஜனங்களுக்கு ரசனை அதிகம்!..



எழுந்து விட்டுக்குச் செல்லலாயினர். உடனே நடுவர் சமயோசிதமாக "எழுந்து போகிறார்களே என்று பார்க்கிறீர்களா...? இந்த ஊர் ஜனங்களுக்கு ரசனை அதிகம். விட்டில் தூங்கறவங்களை எல்லாம் எழுப்பி அழைத்து வருவதற்குத்தான் போறாங்க" என்றாரே பார்க்கலாம்... பட்டிமன்றம் களை கட்டி விட்டது!

— ஜி. நீலா, மன்னார்குடி.

● ● ●



எழுத்தாளர்: பக்கத்து விட்டுல எழுத்தாளர் குடி வந்தது ஆபத்தாப் போச்சு!

எழுத்தாளரின் மனைவி: ஏன், என்னாச்சு?

எழுத்தாளர்: நேத்து என்கிட்டே வந்து அர்ஜெண்டா நாலு 'தீம்' இரவல் குடுங்க. கற்பனை வந்ததும் திருப்பித் தந்துடறேன்னு சொல்றார்.

— சித்ரபுத்ரன், சென்னை.

● ● ●




எங்கள் பள்ளிக்கு இன்ஸ்பெக்டர் வந்திருந்தார். ஒரு மாணவனிடம் "பெண்ணின் பெயருக்கு முன்னால் "திருமதி" என்று போடுகிறார்கள். அது போல ஆண்களின் பெயருக்கு முன்னே என்ன போடுவார்கள்?" என்று கேட்க, பையன் ஒன்றும் தெரியாமல் வகுப்பு ஆசிரியரைப் பார்த்தான்.

உடனே அவர் "என்னடா, "திரு திரு"ன்னு முழிக்கிறே! சொல்லுடா!" என்றாரே பார்க்கலாம்! இன்ஸ்பெக்டரும் எங்களுடன் சேர்ந்து சிரித்து விட்டார்!

— து. மாயாவதாரன், மங்கம்மாள்பட்டி.

● ● ●

● சாமி கும்பிடச் சென்ற இடத்தில் ஒருவருக்கு அருள் வந்து ஆடினார். சாமி ஆட ஆரம்பித்தவுடன், "என்ன வேணும்?" என்று கேட்ட போது பாயசம் கேட்டார்.




ஒரு கிளாஸில் கொடுத்த போது, "ஆத்திக் கொடு! ஆத்திக் கொடு!" என்று அலறினார்!

— பா. லெட்சுமி நாராயணன்,
சென்னை — 101.

● ● ●




வளையல் வாங்கிக் கொண்டு விட்டிற்கு வந்தவுடன் என் அக்கா தனக்கு வாங்கிய வளையலை விட்டு விட்டு அடுத்தவளுடைய வளையலை எடுத்துக் கொண்டதால் சண்டை ஏற்பட்டது. அங்கே வந்த என் தாயார், "எதுக்குச் சண்டை?" என்று கேட்டதற்கு, நான், "வளை 'கொடாப்' போர் நடக்கிறது" என்றவுடன் எல்லோரும் கொல்லெனச் சிரித்தார்கள்.

— ஆர். வேங்கடராமன், பாண்டிச்சேரி.

# மோட்டார் சைக்கிள் தடக் தடக்! காண்போர் நெஞ்சங்கள் படக் படக்!



* மருதமலை படிக்கட்டில்...



* ஹாண்டல்பாரில் கை வைக்காமல்...

**ம**ருதமலை முருகன் ஆலயத்தின் மேல் படியிலிருந்து அடிவாரம் வரை 805 படிகளைத் 'தடக் தடக்'கென்று மோட்டார் சைக்கிள் ஓட்டியே கடந்து வந்திருக்கிறார் கோவையைச் சேர்ந்த நாகராஜ்!

அவரைச் சந்தித்த போது...

''கங்கிராட்ஸ். இந்தச் சாதனையைப் புரிய எத்தனை நேரமாயிற்று?''

''பதினேழே நிமிடங்கள்தான்!''

''யார் அருகிலிருந்தார்கள்?''

'''சௌமா காம்ப்ளெக்ஸ்' சண்முகம் தலைமையில், மீனு மிக்ஸ் உரிமையாளர் சசிதரன் பச்சைக் கொடி காட்டி ஆரம்பித்து வைத்தார். இரண்டாயிரம் மக்கள் சாதனையை நேரில் பார்த்து மகிழ்ந்தார்கள்.''

''பயிற்சி செய்தீர்களா?''

''ஆமாம்; நான்கு ஞாயிற்றுக் கிழமைகள் பயிற்சிக்காக ஒதுக்கினேன்.''

''பாராட்டுக்கள் குவிந்திருக்குமே?''

''பாராட்டுடன் பரிசும் உண்டு. கோவை ரோடராக்ட் சங்கம், மீனு மிக்ஸ் கம்பெனி ஆகியன ஆளுக்கொரு வெள்ளிக் கோப்பை அளித்தன. திருமதி வாசுகி ராஜா வெள்ளிக் கேடயம் அளித்தார்.''

''உங்கள் நோக்கம் என்ன?''

''கின்னஸ்ஸில் இடம் பெறுவதுதான். இதற்கு முன் இதுபோன்ற சாதனையை வேறு யாருமே செய்ததில்லை என்று நினைக்கிறேன்.''

''இதற்கு முன் மோட்டார் சைக்கிள் ஓட்டுவதில் வேறு ஏதாவது சாதனைகள் புரிந்திருக்கிறீர்களா?''

''ஓ யெஸ். கண்களைக் கட்டிக் கொண்டு ஐந்து கிலோ மீட்டர் தூரம் மோட்டார் சைக்கிள் ஓட்டியுள்ளேன்; பதினான்கு சக்கரங்கள், 52 அடி நீளம் உள்ள எல்.பி.ஜி. கேஸ் டேங்கர் லாரிக்கு அடியில் ஐந்து கிலோ மீட்டர் தூரம் மோட்டார் சைக்கிளை ஓட்டிச் சென்றேன்; ஹேண்டல் பாரில் கை வைக்காமல் நின்று கொண்டே பத்து கி.மீ. தூரம் மோட்டார் சைக்கிளை ஓட்டிச் சென்றிருக்கிறேன்; பின்புறமாகப் படுத்துக் கொண்டே ஐந்து கிலோ மீட்டர் தூரம் ஓட்டியுள்ளேன்!''

சாதனைகளைப் பட்டியலிடும் நாகராஜ் கோவை விளையாட்டுக் கழகத் தலைவர். மோட்டார் சைக்கிள்களை வாங்கி விற்கும் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்.

* டாங்கர் லாரிக்கு அடியில்...



படங்கள், பேட்டி:

**வி. எஸ். ராஜகோபால்.**



காவேரி: புதிய ஹேர் ஸ்டைலில்...

# டெக்னீஷியன் கண்டுபிடித்த கதாநாயகி!

●● பெரும்பாலும் புதுமுகங்களை டைரக்டர்தான் தேர்வு செய்வார். தவறிப் போனால் தயாரிப்பாளர். ஆனால் சிவரஞ்சனியைத் தேர்வு செய்தவர் ஒரு டெக்னீஷியன்! பார்த்திபனின் உதவியாளராயிருந்த பார்த்திபராமன் இயக்கும் 'மனசார வாழ்த்துங்கள்' படத்தின் நாயகி எப்படியெப்படியெல்லாம் இருக்க வேண்டுமென்று அனைவரும் கூடி டிஸ்கஸ் செய்திருக்கிறார்கள். அதை ஓர் ஓரமாக நின்று கவனித்துக் கொண்டிருந்திருக்கிறார் ஒரு டெக்னீஷியன். அவர் ஒரு நாள் தற்செயலாக ஒரு பள்ளிக்கூட வாசலைப் பார்க்க நேர்ந்தபோது அகப்பட்டார் உமா. அவ்வளவுதான் + 1 படித்துக் கொண்டிருந்த உமாவைச் சிவரஞ்சனியாக சினிமாஸ்நானம் செய்து விட்டார்கள்!

●● நடிகை மீனாவைச் சந்திக்கச் செல்லும் ஒவ்வொருவரிடமும் அவர் ஒரு விஷயத்தைத் தவறாமல் ஒருவித பிரமிப்போடு சொல்லிக் கொண்டிருக்கிறார். இளையராஜாவின் சொந்த ஊர்ப் பக்கத்தில் ஒரு கிராமம். அங்கு 'என் ராசாவின் மனசிலே....' படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்தது. கதைப்படி மீனா இளம் வயதிலேயே திடீரென்று இறந்து விடுவது போன்ற காட்சிக்காக மீனாவை நடுக்கூடத்தில் கிடத்தி வைத்திருக்கிறார்கள். காட்சி தத்ரூபமாக இருக்க வேண்டுமென்பதற்காக உள்ளூரிலிருந்த சில பெண்களைக் கூட்டி வந்து ஒப்பாரி பாடி அழச் சொல்லியிருக்கிறார்கள். அப்படிப் பாட வந்தவர்கள் நிஜமாகவே அழ ஆரம்பிக்க, அதைக் கண்ட ஹீரோ ராஜ்கிரணும் நிஜமாகவே அழ, கடைசியில் கேமராமேனுக்குக் கையும் ஓடாமல் காலும் ஓடாமல் தன்னை மறந்து ஃபிலிம் தீருகிறவரை படம் பிடித்து விட்டாராம்!

●● ஆங்கிலோ இந்தியப் பெண்ணான ஏஞ்சல்தான் 'வைகாசி பொறந்தாச்சு' திரைப்படத்தில் காவேரியானார்! அப்படத்தில் அவருக்குச் செய்யப்பட்ட சிகையலங்கார ஸ்டைல் சரியாக இல்லையென்று, ரொம்பவும் கஷ்டப்பட்டு வேறொரு புதிய 'விக்'கைக் கண்டுபிடித்துப் 'பந்தயக் குதிரைகள்' படத்தில் நடிக்க வைத்திருக்கிறார்கள். ஆப்டர் ஆல் ஹேர் ஸ்டைலுக்கா இத்தனை பாடு? 'புது முகங்கள் வளர்கிற வரையும் எந்த ஒப்பனையையும் அலட்சியப்படுத்த முடியாது!' என்கிறார் அப்படத்தின் டைரக்டர்!

தொகுப்பு: **எஸ். பாலு.**



# தீபத்திற்கு எந்த எண்ணெய்விட்டால் என்ன பலன்




## எண்ணெய் பலன்

**நெய் :** தீபத்திற்கு நெய்விடுவது மிகச்சிறப்பு. சகலவித செல்வச் சுகத்தையும் வீட்டில் நலனையும் தருகின்றது.

**நல்ல எண்ணெய் :** நல்ல எண்ணெய் விட்டு ஏற்றுவதால் எல்லா பீடைகளும் விலகி விடுகிறது.

**விளக்கெண்ணெய் :** தேவதாசியம், புகழ்ஜீவன சீரகம், பந்து, சுகம், தாம்பத்திய சுகம் இவைகளை இது விருத்தி செய்கின்றது.

**கடலை எண்ணெய்:** இதில் தீபம் ஏற்றுவது மிகவும் தவறு. அந்த வீட்டில் நித்தியக் கடன், துக்கம், பயம், சோரநாசம், பீடை இவைகளே சேரும்.



## திரியின் வகைகள்

**பஞ்சு:** இதில் திரியிடுவது மிகவும் நல்லது.

**தாமரைத்தண்டு:** இதை திரித்து ஏற்றுவது முன்வினை பாவத்தை போக்கும். செல்வம் நிலைத்து நிற்கும்.

**வாழைத்தண்டு :** இதை நூல் பாகமாகப் பக்குவப்படுத்தித் திரியிட, குழந்தைச் செல்வம் உண்டாகும். தெய்வக்குற்றம், குடும்பச் சாபம் முதலியவை நீங்கி, சாந்தி உண்டாகும்.

**வெள்ளை எருக்கன் :** இதன் பட்டையைத் திரியாகச் செய்து தீபம் போட, பெருத்த செல்வம் தரும். பேய் பிடித்தவர்களுக்கு அதன் தொல்லை தீரும்.

**புது மஞ்சள் சேலைத்துண்டு :** இதிலிருந்து திரி செய்து ஏற்றினால் அம்மன் அருள் கிட்டி வியாதிகள் குணமாகும். காற்று சேஷ்டை நீங்கும்.

**சிகப்புகலர் சேலைத்துண்டு :** திருமணத் தடை, மலட்டுத்தன்மை, பைசாச செய்வினை, தோஷங்கள் விலகிவிடும்.

**புது வெள்ளை வஸ்திரம் :** இதில் பன்னீர் விட்டு காய வைத்து திரியாகப் பயன்படுத்த உத்தம பலனைக் காணலாம்.

## எண்ணெய் கலந்து விட்டு ஏற்றுவதால் ஏற்படும் பலன்

வேப்பெண்ணை, நெய், இலுப்பை எண்ணை மூன்றும் கலந்து தீபமிடுவதால் செல்வம் உண்டாகும். இது குலதெய்வத்திற்கும் உகந்தது.

நெய், விளக்கெண்ணை, வேப்பம் எண்ணை, இலுப்பை எண்ணை, தேங்காய் எண்ணை இந்த ஐந்தும் கலந்து ஏற்றி எவன் ஒருவன் ஒரு மண்டலம் (45 நாட்கள்) பூஜை செய்கிறானோ அவனுக்கு தேவியின் அருள், மந்திர சக்தி உண்டாகும்.



# தீபத்திற்கு எந்த எண்ணெய் விட்டால் என்ன பலன்



காலை 3 முதல் 5க்குள் தீபமேற்றுவது வீட்டில் சர்வ மங்கள யோகத்தை உண்டாக்கும்.

வேலை வேண்டுவோர், நல்ல கணவன் வேண்டுவோர் குடும்பசுகம், புத்திர சுகம் வேண்டுவோர், சாயங்கால வேளை தீபம் மகாலட்சுமியை வழிபட அப்பலன் அடையலாம்.

## இறைவனுக்கு உகந்த எண்ணெய்

| | |
|---|---|
| மகாலட்சுமி | நெய் |
| நாராயணன் | நல்லெண்ணை |
| கணபதி | தேங்காய் எண்ணை |
| ருத்ராதி தேவதை | இலுப்பை எண்ணை |
| தேவி | ஐந்து வகை எண்ணைகளும் |
| சர்வ தேவதைகள் | நல்லெண்ணை |





## முகம் ஏற்றுவதின் பலன்

| | |
|---|---|
| ஒரு முகம் ஏற்றுவது | மத்திம பலன் |
| இரண்டு முகம் ஏற்றுவது | குடும்ப ஒற்றுமையை பெருக்கும் |
| மூன்று முகம் ஏற்றுவது | புத்திர சுகம் தரும் |
| நான்கு முகம் ஏற்றுவது | பசு, பூமி இவற்றைத் தரும் |
| ஐந்து முகம் ஏற்றுவது | செல்வத்தைப் பெருக்கும் |

மண்ணால் செய்யப்பட்ட அகல் அல்லது வெள்ளி பஞ்சலோகத்தால் செய்யப்பட்ட விளக்குகள் பூஜைக்கு மிகவும் உகந்தது.

பூஜை முடிந்தவுடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

கல்யாண வைபவங்களுக்கு: சீர்முறுக்கு, சீர்முள்ளுத் தேன்குழல், சீர் அதிரசம், தேன்குழல், அப்பம், திரட்டுப்பால், பருப்புத் தேங்காய் வகைகள் முதலியவை செய்து தரப்படும்.



**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24-2-வது மெயின் ரோடு,
காந்தி நகர் அடையாறு
சென்னை - 600 020
போன்: 412557.

வஸுமதி பள்ளிக் கூடத்திற்குப் போய்க் கொண்டிருந்தாள்.

''அக்கா, அக்கா!'' எனக் கூப்பிட்டபடி பின்னால் யாரோ ஓடி வரும் சப்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். அவள் வீட்டிற்கு அடுத்த வீட்டுச் சின்னப் பையன் கோபி.

வஸுமதி நின்றாள். ''அக்கா, அக்கா! உன்னை அம்மா ஒரு நிமிஷம் வந்து விட்டுப் போகச் சொன்னாள்.''

வஸுமதி திரும்பி நடந்தாள். எதற்காகப் பாக்கியம் அவளைக் கூப்பிடுகிறாள்? ஏற்கெனவே நேரம் ஆகி விட்டது.

பாக்கியம் வீட்டு வாசலிலேயே காத்திருந்தாள்.

''சுமதிக்குக் காலையிலிருந்து வயிற்று வலி. இந்த லீவு லெட்டரை அவள் பாங்கியில் கொடுத்து விடேன். நீ போகும் வழி தானே!'' எனச் சொல்லியபடி பாக்கியம் தன் கையில் தயாராக வைத்திருந்த கடிதத்தை நீட்டினாள்.

''அதற்கென்ன?'' என்று வஸுமதி வாங்கிக் கொண்டாள். பாக்கியத்துடன் பத்து வருஷங்களாகப் பழக்கம். பக்கத்து வீடு என்றாலும் பாக்கியம் வஸுமதியைத் தன் பெண் போலத்தான் நினைத்தாள்.

வஸுமதிக்கு வயது இருபத்தெட்டு. ஐந்து வருஷங்களாகப் பள்ளிக்கூடத்தில் ஆசிரியை வேலை பார்க்கிறாள். அவள் வாங்கிய முதல் மாதச் சம்பளத்தைக் கூடக் கண்ணில் பாராமல், அவள் அம்மா நெஞ்சு வலி வந்து அடங்கி விட்டாள். வீட்டில் அவளும் அவள் அப்பாவும் மட்டுமே.

வஸுமதிக்குத் தன் தாய் இல்லாத குறை தெரியாமல் பார்த்துக் கொண்டாள் பாக்கியம். ஒரு நல்ல நாள், பண்டிகை என்றால் வஸுமதியைத் தனியாகச் சிரமப் பட விட மாட்டாள். ஒன்று — அவர்களைத் தன் வீட்டிற்கு அழைத்து விடுவாள். இல்லை வஸுமதிக்கு எல்லாவற்றையும் தனியாகச் சமைக்கும் சிரமம் இல்லாமல் அத்தனையையும் தன் வீட்டிலிருந்து கொடுத்து அனுப்பி விடுவாள்.

அநேகமாக சுமதியும் வஸுமதியும் காலையில் ஒன்றாகத்தான் புறப்படுவார்கள். இன்றைக்குப் பள்ளிக்கூடத்தில் தணிக்கை இருக்கிறது. அதனால் வஸுமதி சற்று முன்னதாகப் புறப்பட்டு விட்டிருந்தாள்.

சுமதியைப் பார்க்க வஸுமதி அந்த வங்கியின் கிளைக்கு அடிக்கடி போனதுண்டு. தன்னுடன் பணிபுரியும் பலரைச் சுமதி, வஸுமதிக்கு அறிமுகப்படுத்தியிருந்தாள். அவர்களில் பலருடன் வஸுமதியின் நட்பு பாங்கிற்கு வெளியேயும் தொடர்ந்தது.

வஸுமதி தொட்டாற் சுருங்கி இல்லை தான். கேட்ட கேள்விகளுக்கு ஆடவர்களிடம் பதில் கூறுவாளே தவிர அதிகமாகப் பழக மாட்டாள். சுமதியின் இருக்கைக்கு நேர் எதிரில் உட்கார்ந்து வேலை பார்ப்பவன் மோகன். யாரையும் நிமிர்ந்து பார்க்காத வஸுமதிக்கு அவனை மறுபடியும் பார்க்க வேண்டும் என்ற இனம் புரியாத சலனம் ஏற்பட்டது.

வஸுமதியைக் கண்ட மோகன் தன் இருக்கையை விட்டு எழுந்தான்.

''என்ன மேடம்! உங்கள் தோழிக்கு என்ன? மட்டமா? ஜுரமா, வயிற்று வலியா?'' — எனச் சிரித்தபடி கேட்டான்.

''உடம்பு சரியில்லை. ஆமாம், உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''நேற்று கவனித்தேன். அடிக்கடி மூக்கை உறிஞ்சிக் கொண்டு கைக் குட்டையை நனைத்தார்கள்.''

சிரித்தபடி வஸுமதி திரும்ப யத்தனித்தாள். ''ஒரு நிமிஷம். எங்களுக்குக் காப்பி வரும் நேரம். ஒரு வாய் சாப்பிட்டு விட்டுப் போங்கள். எங்கள் 'கான்டீன்' காப்பி ரொம்ப நன்றாக இருக்கும்'' என்றான் மோகன்.

வஸுமதி மறுத்தும் அவன் விடவில்லை. அவள் மறுத்ததும் கூட அரை மனத்துடன் தான். இந்தச் சாக்கில் மோகனுடன் சில நிமிஷங்கள் பேசுவது அவளுக்குப் பிடித்திருந்தது.

வஸுமதியை வங்கியில் நான்கு பேர் முன்னிலையில் மட்டுமே மோகன் ''மேடம்'' எனச் சம்பிரதாயமாகக் கூப்பிடுவான். ஆனால், வெளியில் எப்போதாவது சந்தித்தால் ''வஸு'' என உரிமையுடன் அழைப்பான். அதில் வஸுவிற்கு ஏகப்பட்ட சந்தோஷம்.

தன்னைப் பற்றி எல்லா விவரங்களையும் மோகன் அவளிடம் சொல்லியிருந்தான். நல்ல வசதியான குடும்பம். ஒரே பிள்ளை. கூடப் பிறந்த பெண்கள் கூட இல்லை. துரதிர்ஷ்டவசமாக அவன் பள்ளிப் படிப்பை முடிக்கும் முன்னரே தன் தாய் தந்தையைப் பறிகொடுத்து விட்டான். பிள்ளைப் பேறு இல்லாத தாய் மாமன் அரவணைப்பில் வளர்ந்தான். தந்தை வழி — தாய் வழிச் சொத்து எக்கச்சக்கம் இருந்தது. சுண்டு விரலைக் கூட அசைக்காமல் உட்கார்ந்தபடியே சாப்பிடலாம்.

ஆனால் அவனுக்கு அது பிடித்தம் இல்லை. தன் சொந்தக்காலில் நிற்க வேண்டும். தானே உயர்ந்து காட்ட வேண்டும் என்ற லட்சிய வெறி இருந்தது. அதன்படி பாங்க் அதிகாரியாகச் சேர்ந்து, பயிற்சிக் காலத்திற்குப் பின் வடக்கே எங்கேயோ மூன்று வருட 'அஞ்ஞாத வாசத்'தை முடித்துக் கொண்டு இந்த ஊருக்கு வந்து ஒரு வருஷம் ஆகிறது. ஒரு வீட்டு மாடியை வாடகைக்கு எடுத்துக் கொண்டு தனியாகத் தான் இருக்கிறான். மாமா மாமிக்கு வர இயலாது. ஊரில் ஏகப்பட்ட பொறுப்புகள் அவர்களுக்கு இருந்தன.

வஸுமதியின் அப்பா அவளுக்காக ஏதோ வரன் பார்த்துக் கொண்டிருப்பதாகப்

# ஜனனி



"மாப்பிள்ளை அரசியல் ஈடுபாடு உள்ளவரோ...?"

"ஆமா... உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"திறந்த கார்ல ஜானவாசம் போகும் போது, வேடிக்கை பார்த்தவங்களை நோக்கிக் 'கை' அசைச்சுக் கும்பிடு போடறாரே!"

— வி. ரேவதி

பெயர் பண்ணிக் கொண்டிருந்தார். எந்தச் சம்பந்தத்தையும் அவர் முயன்று முடிப்பதாகத் தெரியவில்லை. அதற்காக வஸுமதி கவலைப்படவும் இல்லை. "அப்பாவைத் தனியாக விட்டு விட்டு என்ன வாழ்க்கை?" என்றுதான் நினைத்தாள்.

ஆனால் இப்போது மோகனைச் சந்தித்த பிறகு தன் வாழ்க்கை அவனுடன் இணையாதா என்ற ஏக்கம் ஏற்பட்டது. எத்தனை படித்து வேலையில் இருந்தாலும் பெண்களுக்குரிய நாணம் அவனிடம் நேரடியாகக் கேட்பதைத் தடுத்தது. அப்பாவிடம் சொல்லிப் பேச்சை ஆரம்பிக்கச் சொல்லலாம். ஆனால் அவரிடம் எப்படிச் சொல்வது? தப்பாக எடுத்துக் கொள்வாரோ?

ஒவ்வொரு நாள் மாலையிலும் அம்மன் கோவிலுக்குப் போகும் வழக்கம் வஸுமதிக்கு உண்டு. இதை அறிந்து சமயம் கிடைத்தபோதெல்லாம் மோகன் அவளுடன் சேர்ந்து கொண்டான். அம்பிகையின் தரிசனம் முடிந்த பிறகு வெளிப்பிராகாரத்தில் பேசிக் கொண்டு உட்கார்ந்திருப்பார்கள். சமயத்தில் இரவு மணி ஒன்பதைத் தாண்டியதும் உண்டு. அவள் அப்பா அவளை ஒரு மாதிரியாகப் பார்த்ததும் உண்டு.

பேச்சுவாக்கில் ஒருநாள் மோகன் தான் கிருஷ்ண ஜயந்தி அன்று பிறந்ததாகக் குறிப்பிட்டான். அதைக் கவனமாக மனத்தில் பதித்த வஸுமதி அவனுக்கு ஒரு டிபன் – பாக்ஸ் நிறைய சீடை, முறுக்கு எடுத்து வந்து கொடுத்தாள்.

அந்த டிபன் – பாக்ஸைக் காலியாக மோகன் கொடுக்கவில்லை. அதில் ஒரு 'பிரேஸ்லெட்' இருந்தது. "தப்பாக நினைக்காதீர்கள், வஸு. இதைக் கடையில் பார்த்த போது உங்கள் கைக்குப் பொருத்தமாக இருக்கும் எனப்பட்டது. வாங்கி விட்டேன்" என்றான்.

வஸுமதி அதைப் பெற்றுக் கொண்டாள். மோகனுக்கும் அவளுக்கும் கல்யாணமான பிறகு அவன் எத்தனையோ விதவிதமான பரிசுகள் வாங்கித் தரலாம். ஆனால் இந்த முதல் பரிசுக்கு அவை ஈடாகுமா!

அன்றைக்கு மோகன் ரொம்ப உற்சாகத்துடன் இருந்தான்.

"ஊரிலிருந்து மாமா, மாமி எல்லாம் வருகிறார்கள்!" என்றான்.

"அப்படியா? என்ன விசேஷம்?"

"நான்தான் வரச் சொன்னேன். இன்னும் எத்தனை நாட்களுக்குத்தான் தனிக் கட்டையாக இருப்பது?"

வஸுமதியின் உடலெங்கும் பரவசம் மின்சாரமாகப் பரவியது. அவள் நினைத்தது கைகூடப் போகும் நாள் நெருங்கி விட்டது.

"நாளைக்குச் சாயங்காலம் ஐந்து மணிக்கு அவர்களை உங்கள் வீட்டிற்கு அழைத்து வரலாம் என்று இருக்கிறேன்."

பெரிய ஆள் இவன். எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டு இத்தனை மெதுவாகச் சொல்கிறானே! வஸுமதிக்குக் கொஞ்சம் கோபம் கூட வந்தது.

"உன் அப்பா வீட்டில் இருப்பார் இல்லையா? எதற்கும் அவரிடம் ஒரு வார்த்தை சொல்லி வை!"

வஸுமதி தன் பிரமிப்பிலிருந்து விடுபடவில்லை. இன்னும் வெளிப்படையாக எவன் சொல்வான். வஸுமதியின் கால் கட்டை விரல் கருங்கல்லில் கோலம் போட முயன்றது.

"எதற்கு வரப் போகிறோம் என நீ கேட்கவில்லையே! இந்த பாங்கில் வேலைக்கு வந்ததிலிருந்து எனக்குச் சுமதியை ரொம்பப் பிடித்து விட்டது. அவளுக்கு எப்படி இருந்தது என எனக்குத் தெரியாது. கூடப் பிறந்தவளைப் போல் உன்னிடம் பழகிய நான் இதை மட்டும் சொல்லவில்லை. போன வாரம்தான் அவளுக்குச் சம்மதம் எனத் தெரிய வந்தது. உன் அப்பாதான் பெரியவர். இரண்டு பேருக்கும் தெரிந்தவர். பேசி முடித்து வைக்க வேண்டும்."

பல மாடிக் கட்டடத்தின் உச்சியிலிருந்து தலைகுப்புறத் தள்ளப்பட்டது போன்ற உணர்வு வஸுமதிக்கு ஏற்பட்டது. தலை சுற்றிக் கீழே விழாமல் கையை ஊன்றிக் கொண்டாள்.

"என்ன பிரமித்துப் போய் இருக்கிறாய்! ஒன்றுமே சொல்லவில்லையே. என் செலக்ஷன் எப்படி?"

"உங்கள் செலக்ஷன்தானே! நன்றாகத்தான் இருக்கும்" என்றாள் வஸுமதி – தன்னிடத்திலிருந்து எழுந்த விம்மலை அடக்கியவாறு.

ஆறு மாதம் கழித்து –

பள்ளிக்கூடம் போய்க் கொண்டிருந்த வஸுமதியைப் பாக்கியம் அழைத்தாள்.

"வஸு... சுமதி உண்டாயிருக்கிறாளாம். மாங்காய்த் தொக்கு போட்டிருக்கிறேன். போகும் போது பாங்கில் கொடுத்து விடுகிறாயா? ஒன்றும் சிரமம் இல்லையே!" எனக் கேட்டாள்.

"இதில் என்ன சிரமம்?" எனச் சொல்லியபடி பாட்டிலை வாங்கிக் கொண்டாள் வஸுமதி.

அந்தக் கிராமத்திற்கு வந்து ஒரு நாள் கூட ஆகவில்லை. அதற்குள் சென்னைக்குத் திரும்பலாமா என்று கேட்கும் அவரைக் கோபத்துடன் பார்த்தான் குமார்.

''என்ன அதற்குள்ளாகவா...?'' கேட்டும் விட்டான்.

'கிராமத்தை ஒரு ரவுண்ட் கூட வரவில்லை, அதற்குள் கிளம்பு என்கிறாரே... இதற்கு நாம் தனியாகவே வந்திருக்கலாம்... சிட்டிய விட்டு ஒரு நிமிஷம் கூடப் பிரிஞ்சு இருக்க முடியாதா இவரால்...' மனத்திற்குள் குமுறினான்.

''இந்தக் குக் கிராமத்துல என்னடா இருக்கு? ஏரியும் குளமும் வத்திப் போய்... எங்க பார்த்தாலும் பொட்டல் காடுதான்! பசுமையை மருந்துக்குக் கூடக் காணோம். பேசாம ஊருக்குப் போகலாம் வா...'' என்று மீண்டும் நச்சரித்தார் அவர்.

மெட்ராஸ்ல பொறந்து வளர்ந்த நாமே, இப்படி கிராமத்தை விரும்புகிற போது கிராமத்துல பொறந்து வளர்ந்த இவர் என்னடாவென்றால், சிட்டி, சிட்டின்னு கெடந்து புலம்பறார்... ஜாலியா டூரிங் டாக்கீஸ்ல ஒரு சினிமா பார்க்கலாம்னா,



# கிராமங்கள்

விட மாட்டார் போலிருக்கே?

''குமார்... என்னடா நான் சொல்லிண்டேயிருக்கேன், நீ பாட்டுக்கு ஏதோ யோசனையிலிருக்கே? இதோ பார்... உனக்கு இஷ்டமில்லேன்னா, ரெண்டு நாள் என்ன... ஒரு வாரம் கூட இருந்துட்டு வா, நான் இப்பவே கிளம்பறேன்...''

''இங்கே உங்களுக்கு என்ன கொறச்சல் தாத்தா?''

''கொறச்சலா... இங்கே என்னடா யிருக்கு? முன்ன மாதிரி கிணறு, மடுவுன்னு போய் ஹாய்யாக் குளிச்சிட்டு வர எங்காச்சும் தண்ணியிருக்கா? எங்கேயோ நாற்சந்தியில, ஓவர்ஹெட் டேங்க் தண்ணிய வாளி வாளியா எடுத்துண்டு வர வேண்டியிருக்கு. குளிச்சிட்டுக் கோயிலுக்குப் போகலாம்னா... கோயில் சாத்தியிருக்கு. கேட்டா... மூணு கிராமத்துக்கும் சேர்த்து ஒரு குருக்கள்தான் இருக்காராம்... அதனால ஒண்ணு விட்டு ஒரு நாள்தான் வருவாராம்... அதுவும் ஏழு மணிக்கெல்லாம் வந்து பூஜையைப் பண்ணிட்டுப் போயிடறார்... சாயங்காலம் சுத்தமா வரதே கெடயாதாம்... உள்ளூர்ல விளக்கேத்தினாத்தான் உண்டு. கோயில்ல ஒரு பாராயணமா, உபன்யாசமா... ஊஹூம்... கோயிலுக்குக் காலையில யார் வரா...? மூலைக்கு மூலை டீக் கடையிலதான் ஜனங்க நிரம்பி வழியறது. போதாக்குறைக்கு இருக்கவே யிருக்கு, சாராயக் கடை! எல்லா டீக் கடையிலும் காதப் பொளக்கற மாதிரி சினிமாப் பாட்டு. சாயங்காலமானா ரெண்டு டெண்டு கொட்டாயிலிருந்தும் பாட்டு அலற ஆரம்பிச்சுடுது. எப்பப் பார்த்தாலும் புழுதியும் இரைச்சலும்... இப்படியா இருந்தது நான் பொறக்கச்சே இந்தக் கிராமம்? வயலும் வாய்க்காலுமா... தோப்பும் துரவுமா... பசுமையா, எவ்வளவு அமைதியா இருந்தது... கோயில்ல மூணு கால பூஜை எப்படியெல்லாம் அமர்க்களமா நடந்தது... இதுக்கு நம்ம மெட்ராஸ் எவ்வளவோ தேவலை! வீட்டுல நிம்மதியா போர் தண்ணி. கோயிலுக்குப் போனா உச்சி கால பூஜை வரை ஜனங்கள். எங்க சத்சங்கத்தின் சார்பா, நம்ம கோயில்ல இப்ப 'ஜடபாராயணம்' நடத்திண்டிருக்கு. அடுத்த வாரம் 'ஸ்ரீமத் பாகவதம்' உபன்யாசம் ஆரம்பம்... நாலு பசங்களுக்கு நான் சாயங்காலத்துல 'ஸ்ரீருத்ரம்' சொல்லிக் கொடுத்திண்டு வரேன்... இப்படி நிம்மதியா இருக்கிற என்னைப் போய், இந்தக் கிராமத்துல சினிமாப் பாட்டக் கேட்டிண்டு இருக்கச் சொல்றையா? வேணாம்டா குமார்... நான் பொறந்த என் கிராமம், எனக்கு முன்னாடியே செத்துப் போச்சுடா...'' என்று தமது மடிசஞ்சியைத் தூக்கிக் கொண்டு கிளம்பும் தாத்தாவை ஆச்சரியத்துடன் பார்த்தான் குமார்!

— க. ஒப்பிலி அப்பன்.



தி. மு. க.
ஆட்சி
டிஸ்மிஸ்
செய்யப்படுவதற்கு
முதல் வாரம்,
பா. மனோகரன்
(தி. மு. க.)
தொகுதியான
சிவகங்கைத்
தொகுதியைச்
சுற்றிப்
பார்த்த
போது,
ஆச்சரியமாக
இருந்தது....

* பெண்களுக்குத் தையல் பயிற்சி...

* அனாதையான காசியம்மாவுக்கு வேலை...





* பா. மனோகரன்:
அனைவரும்
பாராட்டுகிறார்கள்!

* மாரியும் குமாரும்: ''ரிக்ஷா வாங்க உதவினார்.''



''கட்சி சாரின்றி அனைவருமே சென்ற பொதுத் தேர்தலைப் புறக்கணிப்பதாக முடிவு செய்திருந்தோம். காரணம், எங்கள் பகுதியிலுள்ள சுமார் ஐயாயிரம் ஏக்கர் நிலமும் பெரியாறு நீர்ப்பாசனத் திட்டத்தின் மூலம் கால்வாயில் நீர் வரத்தின்றிக் காய்ந்து போனதுதான். முன்னால் இருந்த எந்த எம்.எல்.ஏ.வும் கால்வாயைச் சரிப்படுத்தித் தண்ணீர் வருவதற்கான எந்த முயற்சியையும் செய்யவில்லை. அந்த நிலையில் பா. மனோகரன்

# ஆச்சரியப்படச் செய்த சிவகங்கைத் தொகுதி!

* பெரியாறு வாய்க்காலில் தண்ணீர் வருகிறது!



வந்தார். தாம் தேர்தலில் வெற்றி பெற்றால் உடனடியாகக் கால்வாயைச் செப்பனிட்டுத் தண்ணீர் வரச் செய்வதாக வாக்களித்தார். நாங்களும் அவரை நம்பி வாக்களித்தோம். வெற்றி பெற்றதும் கொடுத்த வாக்குறுதியை மறக்காமல், முயற்சியெடுத்து முப்பது லட்சம் செலவில் வாய்க்காலைச் செப்பனிட்டுத் தண்ணீர் வரச் செய்தார். எங்களைப் பொறுத்தவரை கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றிய எம். எல். ஏ. பா. மனோகரன் மட்டும்தான்.....'' என்று சளசளவென்று தண்ணீர் வந்து கொண்டிருந்த வாய்க்காலுக்கே நம்மை அழைத்துச் சென்று காண்பித்தார் நாமனூரைச் சேர்ந்த ஏ.எல். திருநாவுக்கரசு.

''எங்களூரிலுள்ள பெண்களின் முன்னேற்றத்திற்கு ஏதாவது உதவி செய்ய வேண்டும் என்று மனோகரனிடம் கேட்டேன். பெண்கள் சங்கமொன்றை ஆரம்பித்து, உறுப்பினர்களைச் சேர்த்துக்கொண்டு வரும்படி சொன்னார். அதன்படியே செய்தோம். அதன் பிறகு சமூக நலத்துறையின் மூலமாகத் தையல் மெஷின்கள் பெற்றுப்



• [illegible]: ஆச்சரியப்பட்டார்!

பெண்களுக்குத் தையல் கற்றுத்தர ஏற்பாடு செய்தார். ஆதரவற்ற முதியோர்களுக்குப் பென்ஷன் கிடைக்க ஏற்பாடு செய்தார். பெண்களுக்குத் தையல் மட்டும் போதாது; செயற்கை வைரத் தொழில் இருந்தால் விவசாய வேலைகள் இல்லாத நேரத்தில் வருமானம் பெற வாய்ப்பாக இருக்குமென்று அதற்கான ஏற்பாடுகளையும் செய்து கொண்டிருக்கிறார். உதவி என்று போனால் அவர் யாருக்கும் மறுப்பதே இல்லை...!'' என்றார் வாணியங்குடியைச் சேர்ந்த திருமதி காந்திமதி.

திருமதி காந்திமதி சொன்னதுபோல் சமூக நலத்துறையின் மூலமாகப் பெண்களுக்குத் தையல் பயற்சி தரும் ஏற்பாடுகளைப் பல ஊர்களிலும் நாம் பார்த்தபோது வியப்பாக இருந்தது!

"எங்கள் பெண்ணுக்கும் எதிர் வீட்டுப் பையனுக்கும் எப்படியோ தொடர்பு ஏற்பட்டு, வயிற்றிலும் குழந்தை உருவாகி விட்டது. பையன் வீட்டார் எங்கள் உறவினர்தான் என்றாலும் வெறுமனே விறகு வெட்டி ஜீவனம் செய்து கொண்டிருக்கும் எங்கள் வீட்டில் சம்பந்தம் செய்து கொள்ளத் தயாராக இல்லை. பஞ்சாயத்து முடிவுக்கும் அவர்கள் கட்டுப்படவில்லை. இந்த நிலையில் பெண்ணுக்கு ஓர் ஆண் குழந்தையும் பிறந்து விட்டது. என்ன செய்வது என்று தெரியாமல் எம். எல். ஏ. மனோகரனிடம் சென்று முறையிட்டோம். அவர் உடனே எங்கள் சார்பில் வழக்குத் தொடுத்து வாதாடிக் கொண்டிருக்கிறார். இத்தனையையும் அவர் எங்களுக்கு இலவசமாகத்தான் செய்து கொண்டிருக்கிறார்....'' என்று பேரக் குழந்தையைக் கையில் வைத்துக் கொண்டு சோக உணர்ச்சியும் நன்றியுணர்ச்சியும் மேலிடக் கூறினார்கள் இந்தத் தொகுதியைச் சேர்ந்த ஒரு கிராமத்தில் வசிக்கும் தம்பதியினர்.

"மனோகரன் எம். எல். ஏ.வான பிறகு தான் எங்களுக்கு டவுன் பஸ் வருகிறது. நூற்றைம்பது ஹரிஜனக் குடும்பங்களுக்கான இலவச வீடுகள் கட்டித்தரும் திட்டத்தில் முதல் கட்டமாக இருபத்தேழு வீடுகள் கட்டப்பட்டுக் கொண்டிருக்கின்றன. ஆரம்ப சுகாதார நிலையம் வரப் போகிறது. மேல் நிலை நீர்த் தொட்டி கட்டப்பட்டது. பால் சொசைட்டி நல்ல முறையில் இயங்க ஆரம்பித்தது....'' என்று வரிசையாகச் சொல்லிக் கொண்டே போனார் கோவானூரைச் சேர்ந்த லோகநாதன்.

"நீண்ட காலமாக எவ்வளவோ முயன்றும் எங்களூரில் ஓர் ஆரம்ப சுகாதார நிலையம் கொண்டுவர முடியவில்லை. மனோகரன் எம். எல். ஏ. ஆனபிறகுதான் எங்களால் அது முடிந்தது!'' என்றார் கிராம அம்பலக்காரரும் (தலைவர்) அ. தி. மு. க. வைச் சேர்ந்தவருமான ஜி. பாஸ்கர் அம்பலம். "அது மட்டுமல்ல; அப்பா, அம்மா இருவரையும் இழந்து, மூன்று சிறு தங்கைகளுடன் அநாதரவாய் நின்ற காசியம்மாள் என்ற பெண்ணுக்கு உடனடியாகச் சத்துணவு ஆயா வேலை வாங்கித் தந்தார். எந்த விஷயமானாலும் கட்சி சார்பில்லாமல் உதவக் கூடியவர் மனோகரன்'' என்றார் தமராக்கி (தெற்கு) கிராமத்தைச் சேர்ந்த அவர்.

"நாங்கள் வாடகைக்கு ரிக்ஷா எடுத்து ஓட்டிக் கொண்டிருந்தோம். எங்களை அழைத்துக் கேட்டார் மனோகரன். நாங்கள் சொந்தமாக ரிக்ஷா வாங்க வசதியில்லாததால்தான் வாடகைக்கு எடுத்து ஓட்டிக் கொண்டிருப்பதாகச் சொன்னோம். 'லோனில் வாங்கித் தந்தால் ஒழுங்காகத் திருப்பிக் கட்டுவீர்களா?' என்று கேட்டார். ஒழுங்காகக் கட்டுவதாகச் சொன்னதும் சிவகங்கையில் எங்களைப் போலுள்ள மொத்தம் எட்டுப் பேருக்கு மோட்டார் வைத்த சைக்கிள் ரிக்ஷா வாங்கிக் கொடுத்தார்.



"உங்க பேச்சு, சிரிக்கும்படியாகவும், சிந்திக்கும்படியாகவும் இருந்தது!''

"அப்படியா?''

"ஆமா! முதல்ல சிரிக்கும்படியாகவும், அப்புறம் எதற்காகச் சிரித்தோம் என்று சிந்திக்கும்படியாகவும் இருந்தது!''

— வி. ராஜப்பா.

இப்போது நாங்கள் முன்பு வாடகையாகக் கொடுத்த பணத்தைக் கடன் தவணையாகக் கட்டிக் கொண்டிருக்கிறோம்!'' என்றார்கள் மாரியும் குமாரும்.

இப்படி ஏராளமான பேர் மனோகரனைப் பற்றி நல்ல அபிப்ராயங்களையே சொன்னார்கள். 'சிவகங்கையில் ஒரு பெண்கள் கல்லூரி தேவை. சிவகங்கை அருகிலுள்ள கிராஃபைட் தொழிற்சாலை சரியானபடி இயங்கினால் ஏராளமானோருக்கு வேலை வாய்ப்புக் கிடைக்கும். அவற்றுக்கும் அவர் முயற்சி செய்து கொண்டு தான் இருக்கிறார். அவரை யார் வேண்டுமானாலும் எந்த நேரத்திலும் சென்று சந்திக்கலாம். தோழமை உணர்வோடு மக்களிடம் பழகுபவர்!'' என்றே பலரும் நம்மிடம் குறிப்பிட்டார்கள்.

இந்த நிலையில் நாட்டரசன் கோட்டையைச் சேர்ந்த செல்வி ஸ்வர்ணலதா சண்முகம் மாத்திரம் விதிவிலக்காக நமக்கொரு கடிதம் எழுதியிருந்தார். ''எங்களூர் மெயின் ரோட்டிலிருந்து உள்ளே தள்ளியிருக்கிறது என்பதால் பல பஸ்கள் எங்களூருக்குள் வந்து போவதேயில்லை. இது எம். எல். ஏ. வுக்குத் தெரியுமோ தெரியாதோ எனக்குத் தெரியாது. நீங்கள் அவரிடம் சொல்லி ஏதாவது செய்ய வேண்டும்!'' என்பதுதான் அவர் நமக்கு எழுதிய கடிதம்.

மனோகரனிடம் நாம் இது பற்றிச் சொன்னதும் உடனடியாக நாட்டரசன் கோட்டைக்குள் செல்ல வேண்டிய பஸ்களின் கால அட்டவணையைக் குறித்துக் கொண்டு வந்தார். நம்மையும் அழைத்துக் கொண்டு நாட்டரசன் கோட்டைக்குச் சென்றார். செல்வி ஸ்வர்ணலதா சண்முகத்தைச் சந்தித்து, ''இதோ பாருங்கள். இதுதான் உங்களூருக்குள் வர வேண்டிய பஸ்களின் கால அட்டவணை. இதன்படி பஸ்கள் வருகின்றனவா இல்லையா என்பதை நீங்களே கவனியுங்கள். அப்படி வரவில்லையானால் நீங்கள் கல்கி பத்திரிகைக்குக் கடிதம் எழுதித்தான் என்னைக் கேட்க வேண்டும் என்பதில்லை. நீங்களே என்னை நேரடியாக வந்து கேள்வி கேட்கலாம். அந்த உரிமை உங்களுக்கு உண்டு! உங்கள் தந்தையார் சண்முகம் எங்களின் எதிர்க்கட்சிக் கூட்டணி (தா. பாண்டியனின் கம்யூனிஸ்ட்கட்சி)யில் இருப்பவராயிற்றே; நான் தி. மு. க. வைச் சேர்ந்தவனாயிற்றே என்றெல்லாம் கட்சி வித்தியாசம் பார்க்க வேண்டிய அவசியமே இல்லை!'' என்றார் மனோகரன்.

செல்வி ஸ்வர்ணலதாவுக்கு ஒரே ஆச்சரியம்! ஆச்சரியம் அவருக்கு ம்ட்டுமல்ல; இப்படிக் கூட ஓர் எம். எல். ஏ. வைத் தொகுதி மக்கள் பாராட்டுவார்களா என்று நமக்கும்தான்!

**— இளங்கோவன்**

வண்ணப்படங்களும், படமும்: **சுபா**



''தோல்வியான உங்க படத்துக்கு ஏன் விழா எடுக்கிறீங்க?''

''இது என்னோட ஐம்பதாவது தோல்விப் படமாச்சே!''

— மணியன் தர்மலிங்கம்.



கல்யாண மண்டபத்தில் —

''இந்தாங்க சார் டிப்ளமாக் காப்பி.''

''அதென்னய்யா டிப்ளமாக் காப்பி!''

''நீங்க பொண்ணு வீடாச்சே, அதனாலே இது. மாப்பிள்ளை வீடுன்னா டிகிரிக் காப்பி கொடுப்போம்.''

— ப. விஜயபாலன்.



மனைவி: கதை எழுதி போஸ்ட் பண்ணிட்டு வர்றேன்னு கிளம்பிட்டு, ஏன் உடனே திரும்பிட்டீங்க?

எழுத்தாளர்: சகுனம் சரியில்லே. எதிர்த்தாற்போல பழைய பேப்பர்க்காரன் வர்றான்!

— டி. என். பாலகிருஷ்ணன்.

# சிவகாமியின் சபதம்

ஒன்பதாம் அத்தியாயம்

## ரதியின் புன்னகை

மாமல்லரின் ஓலையில் ஒரு பகுதியைச் சிவகாமி நினைத்து நினைத்து ஆனந்தித்துக் கொண்டே வீடு நோக்கி நடந்தாள். அப்படி அவளை மெய்மறக்கச் செய்தது ஓலையின் கடைசிப் பகுதியேயாகும். சக்கரவர்த்தியின் குமாரனாயிராமல் ஆயனரிடம் சிற்பக்கலை கற்கும் சீடனாயிருக்க விரும்புவதாக மாமல்லர் தெரிவித்திருந்தாரல்லவா! ஆகா! இந்த விஸ்தாரமான பரத கண்டத்தில் மூன்றில் ஒரு பாகத்தைத் தனி அரசு புரியும் சக்கரவர்த்தியின் குமாரர், தமக்குரிய அந்த மகத்தான சாம்ராஜ்யத்தை வேண்டாமென்று வெறுத்துத் தள்ளச் சித்தமாயிருக்கிறார்! எதற்காக? அரண்மனை மான்யம் பெற்று ஜீவனம் செய்யும் ஆயனச் சிற்பியின் மகளுக்காக! அந்தப் பெண்ணிடம் தாம் கொண்ட காதல் நிறைவேறுவதற்கு இந்தச் சாம்ராஜ்யம் தடையாயிருக்கிறதென்பதற்காக! இம்மாதிரி அதிசயத்தைக் கதையிலோ காவியத்திலோ கேட்டதுண்டா?

"ரதி! உன் தோழி சிவகாமியைப் போல் பாக்கியசாலியான பெண் இந்த ஈரேழு பதினாலு லோகத்திலும் இல்லையடி!" என்று கூறிச் சிவகாமி தன்னைத் தொடர்ந்து வந்த மானின் முகத்தை இரு கரங்களாலும் பிடித்து நிமிர்த்தினாள். ரதியோ தன் அழகிய கண்களை அகல விரித்து அவளை ஆவலுடன் நோக்கிற்று.

"இதோ பார், ரதி! நீயும் அதிர்ஷ்டசாலிதான்! எட்டு மாதத்துக்கு முன்பு உன்னிடம் மாமல்லரைப்பற்றி நான் குறைவாகக் கூறியதை மறந்துவிடு. 'இன்று இவர் கமலி வீட்டுக்கு நான் போகக்கூடாது என்கிறார். நாளைக்கு ரதியை உன்னுடன் அரண்மனைக்கு அழைத்து வரக்கூடாது என்பார். இப்படிப்பட்ட பெரிய மனிதர்களின் உறவு நமக்கு ஒத்துவராதடி, அம்மா!' என்று சொன்னேனல்லவா? அதே பல்லவ குமாரர்தான் இன்றைக்கு 'இராஜ்யம் என்னத்திற்கு, சிவகாமி! எனக்கு நீயே போதும்!' என்கிறார். அவர் சொல்வது நியாயந்தானே ரதி! எனக்கு அவரும், அவருக்கு நானும் இருந்தால் போதாதா? இராஜ்யம் என்னத்திற்கு? சண்டை, கொலை, சாவு எல்லாம் என்னத்திற்கு?"

இவ்விதம் கூறி ரதியின் இரண்டு தூக்கிய காதுகளுக்கும் நடுவில் சிவகாமி முத்தமிட்டுவிட்டு, மறுபடியும் சொல்லுவாள்.

"ரதி, உன்பாடு யோகந்தான்! மாமல்லரும் நானும் மனித சஞ்சாரமே இல்லாத நடுக்காட்டில் பர்ணசாலை கட்டிக்கொண்டு ஆனந்த வாழ்க்கை நடத்தப்போகிறோம். அப்போது இந்தச் சுகப் பிரம்ம ரிஷியை அடித்துத் துரத்திவிட்டு உன்னை மட்டுந்தான் எங்களுடன் வைத்துக் கொள்ளப் போகிறேன். 'உனக்கு வேலை

அமரர் கல்கி



அருள்வாக்கு

'ஈசுவரனைக் காட்டிலும், குரு பெரியவர்; ஈசுவர பக்தியைக் காட்டிலும் குரு பக்தி விசேஷம் என்கிறார்களே, ஏன்?' என்று கேட்டால்; ஈசுவரனை யாரும் பார்க்கவில்லை. பிரத்தியக்ஷமாக நாம் பார்க்கக் கூடிய ஒரு மனிதர் எப்போதும் சுத்தமாய், ஞானம் உடையவராய், அசைவு இல்லாத, சித்தம் உடையவராய், அப்பழுக்கு இல்லாமல் நமக்குக் கிடைத்து விட்டால், நாம் எந்த மனச்சாந்திக்காக ஈசுவரனிடத்தில் போகிறோமோ, அந்தச் சாந்தி இவரிடம் பக்தி செலுத்தினாலே கிடைத்துவிடுகிறது. அதனால்தான்,

குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணு:
குருர் தேவோ மஹேச்வர:!

என்று சொல்லியிருக்கிறார்கள். இந்த ச்லோகத்தில் குருவுக்கும் பரமாத்மாவுக்கும் அபேதம் சொல்லியிருப்பது ஒரு விசேஷம். Incidental — ஆக இதிலேயே இன்னொரு விசேஷம், இதில் விஷ்ணு, சிவன் இருவரையும் சொல்லியிருப்பதால் இந்த ச்லோகத்தைச் சொல்லி, நாம் குரு வந்தனம் பண்ணினால் நமக்குச் சிவ — விஷ்ணு அபேத பாவமும் உண்டாகிவிடும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

நிரம்ப இருக்கும், ரதி! எனக்கும் மாமல்லருக்கும் இடையில் நீ அடிக்கடி தூது போக வேண்டியதாயிருக்கும்!''

ரதி கண்களினாலேயே ஒரு புன்னகை புரிந்துவிட்டு, 'போதும் இந்த அசட்டுத்தனம்!' என்பதுபோல் தலையை ஆட்டி விட்டு, சிவகாமியின் கையிலிருந்து திமிறிக் கொண்டு புல் மேயச் சென்றது.

''அம்மா! சிவகாமி!'' என்ற குரலைக் கேட்டதும் சிவகாமி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். அவள் பார்த்த இடத்தில் செடி கொடிகளை விலக்கிக் கொண்டு ஆயனர் நிற்பதைக் கண்டாள். தான் ரதியுடன் பேசிக் கொண்டிருந்தது அவர் காதிலே விழுந்ததோ என்ற எண்ணத்தினால் அவளுடைய முகத்தில் நாணமும் அச்சமும் கலந்து தோன்றின.

ஆனால், மலர்ந்த முகத்துடன் ஆயனர் கூறிய வார்த்தைகள் அவளுடைய பயத்தைப் போக்கின.

''குழந்தாய்! எனக்குத் தூக்கிவாரிப் போட்டுவிட்டது. நடுக்காட்டிலே யாரோடு பேசிக் கொண்டிருக்கிறாய் என்று பார்த்தேன். ரதியுடன் பேசிக்கொண்டிருக்கிறாயா? பாவம்! நீ என்ன செய்வாய்? உன்னோடு பேசுவதற்குக்கூட இவ்விடத்தில் யாரும் இல்லை. பொழுது போவதே உனக்குக் கஷ்டமாய்த்தானிருக்கும். காஞ்சியிலாவது உன் தோழி கமலி இருக்கிறாள்...''

இப்படிப் பேசிக்கொண்டே நெருங்கி வந்த ஆயனரைச் சிவகாமி கட்டித் தழுவிக் கொண்டு, ''அப்பா உங்களுக்குத் தெரியுமா? கமலி... கமலி...'' என்று மென்று விழுங்கினாள்.

ஆயனர் பதறலுடன், ''ஐயோ கமலிக்கு என்ன, அம்மா? ஏதாவது உடம்புக்கு வந்திருக்கிறதா?'' என்று கேட்டார்.

''ஆமாம், அப்பா! கமலிக்கு உடம்பிலே தான் வந்திருக்கிறதாம்!'' என்று கூறிவிட்டுச் சிவகாமி இடி இடியென்று சிரித்தாள்.

அதைப் பார்த்த ஆயனர் விபரீதமாக ஒன்றுமிராது என்று தீர்மானித்துக்கொண்டு, ''பின்னே என்ன, சிவகாமி? ஒரு வேளை இங்கே வருகிறதாகச் சொல்லி அனுப்பியிருக்கிறாளோ?'' என்றார்.

''இல்லை, அப்பா, இல்லை'' என்று சொல்லிக் கொண்டே சிவகாமி ஆயனரின் காதினருகில் நெருங்கி, ''கமலி வயிற்றில் சின்னக் கண்ணன் வந்திருக்கிறானாம்!'' என்றாள்.

ஆயனர் சற்று நிதானித்து விஷயம் இன்னதென்று தெரிந்து கொண்டார். முன்னைவிட அருமையுடன் சிவகாமியை அணைத்துத் தழுவிக் கொண்டு, ''சந்தோஷம் அம்மா!

சிவகாமியின் கல்யாணத்தின் போதே நான் ஆசிர்வாதம் பண்ணினேன்....'' என்றார்.

''அப்பா! உங்கள் செல்வக் குமாரிக்கு எப்போது கல்யாணம் ஆயிற்று?'' என்றாள் சிவகாமி.

தாம் வாய் தவறிச் 'சிவகாமி' என்று சொல்லிவிட்டது ஆயனருக்குச் சட்டென்று புலப்பட்டது. அவர் ஓர் அசட்டுப் புன்னகை செய்துவிட்டு, ''என்ன அம்மா சொன்னேன்? சிவகாமியின் கல்யாணத்தின்போது' என்று சொல்லிவிட்டேனா? அதனால் என்ன? உனக்கும் ஒரு நாள் கல்யாணம் நடக்கத்தான் போகிறது. நான் சொல்ல வந்தது என்னவென்றால், கமலியின் கல்யாணத்தின் போது நான் அவளுக்கு ஆசிர்வாதம் செய்தேன்: 'சீக்கிரத்தில் உனக்கு ஆண் குழந்தை பிறக்க வேண்டும். அவன் என்னிடத்தில் சிற்பக்கலை கற்றுக்கொள்ள வரவேண்டும்' என்று....'' என்றார்.

இவ்விதம் கூறிய ஆயனர் பேச்சை நிறுத்திவிட்டு மௌனத்தில் ஆழ்ந்தார். அவருடைய உள்ளமானது சிவகாமியின் விவாகத்தைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கியது. பரஞ்சோதிக்கு அவளை மணம் செய்விக்கலாம் என்று தாம் முன்னம் எண்ணியது நினைவு வந்தது. அவனோ இப்போது பெரிய போர் வீரனாகவும் கோட்டைத் தளபதியாகவும் ஆகியிருக்கிறான். கேவலம் ஒரு சிற்பியின் மகளை அவன் மணந்து கொள்ள இணங்குவானா?

''அப்பா! என்ன யோசிக்கிறீர்கள்?'' என்று சிவகாமி கேட்கவும் ''ஒன்றுமில்லை, அம்மா! பரஞ்சோதியுடன் நான் பேசிக் கொண்டிருந்த போது நீ திடீரென்று எங்கே போய்விட்டாய்? அவனிடம் சக்கரவர்த்தி ஒரு முக்கியமான சமாசாரம் சொல்லியனுப்பியிருக்கிறார். அதைப்பற்றி உன் அபிப்பிராயத்தைக் கேட்கலாமென்று பார்த்தால், உன்னைக் காணோம். வா வீட்டுக்குப் போய்ச் சாவகாசமாகப் பேசலாம். உன் அத்தை நாம் இரண்டு பேரும் சாப்பிடாமல் எங்கே தொலைந்து போய்விட்டோம் என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருப்பாள்!'' ,என்றார்.

இருவரும் ஒற்றையடிப் பாதையில் மௌனமாக நடந்தார்கள். ஆயனரின் உள்ளம் சிவகாமியின் வருங்காலத்தைப் 'பற்றிய சிந்தனையில் ஆழ்ந்திருந்தது. சிவகாமியின் உள்ளமோ, தேன் மலரை மொய்க்கும் வண்டைப்போல் மகிழ மரப்பொந்தில் இருந்த மாமல்லரின் ஓலையைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

## பத்தாம் அத்தியாயம்

# ஆனந்த நடனம்

அப்பா! நான் நடனம் ஆடி வெகுகாலம் ஆகிவிட்டதே. இன்றைக்கு ஆடட்டுமா?'' என்று சிவகாமி கேட்டாள்.

இருவரும் வீட்டுக்குச் சற்றுத்தூரத்தில் ஒரு மரத்தடியில் கிடந்த கல்லின் மீது உட்கார்ந்திருந்தார்கள். பக்கத்து மரத்தடியிலே வர்ணம் அரைக்கும் கல்லுவங்களும், வர்ணம் காய்ச்சும் அடுப்புகளும், சட்டி பானைகளும் கிடந்தன.

ஆயனர் சிறிது அதிசயத்துடன் சிவகாமியை உற்று நோக்கினார்.

''இன்றைக்கு என்ன குழந்தாய், உன் முகம் இவ்வளவு களையாயிருக்கிறது?'' என்று வினவினார்.

உடனே மறுமொழி சொல்ல முடியாமல் சிவகாமி சிறிது திகைத்துவிட்டு, பிறகு, ''கமலியைப்பற்றிக் கேள்விப் பட்டதிலிருந்து எனக்கு உற்சாகமாயிருக்கிறது. அப்பா! காஞ்சிக்குப் போய் கமலியைப் பார்த்துவிட்டு வரலாமா?'' என்றாள். உடனே, தான் பிழை செய்துவிட்டதை உணர்ந்து நாவைப் பற்களினால் கடித்துக் கொண்டு, ''ஆமாம், அப்பா! சக்கரவர்த்தி ஏதோ நமக்குச் செய்தி அனுப்பியதாகச் சொன்னீர்களே, அது என்ன?'' என்று கேட்டாள்.

''எதிரி சைனியம் வட பெண்ணை ஆற்றைக் கடந்து விட்டதாம். காஞ்சியை நெருங்கி வந்து கொண்டிருக்கிறதாம். காஞ்சியை முற்றுகை போட்டாலும் போடுமாம். ஆகையால், 'ஒன்று நீங்கள் காஞ்சி நகருக்குப் போய்விடுங்கள்; அல்லது சோழ தேசத்துக்குப் போங்கள்' என்று சக்கரவர்த்தி சொல்லி அனுப்பினாராம். நீ என்ன சொல்கிறாய், அம்மா?''

''நான் என்ன சொல்ல, அப்பா! எனக்கு என்ன தெரியும்? தங்கள் இஷ்டம் எதுவோ, அதுதான் எனக்கு இஷ்டம்....''

''என் இஷ்டம் இங்கேயே இருக்கவேண்டுமென்பதுதான். இந்தக் காட்டை விட்டு வேறு எங்கே போனாலும் எனக்கு மனநிம்மதியிராது'' என்றார் ஆயனர்.

''எனக்கும் அப்படித்தான், அப்பா! இங்கேயே நாம் இருந்து விடலாமே?'' என்றாள் சிவகாமி.

மாமல்லரின் ஓலையில், தாம் அவளைச் சந்திக்கும் வரையில் ஒன்றும் முடிவு செய்ய வேண்டாம் என்று எழுதியிருந்ததை நினைத்துக் கொண்டுதான் மேற்கண்ட விதம் சிவகாமி சொன்னாள்.

காஞ்சிக்குப் போய்க் கமலியைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை ஒரு பக்கத்தில் அவளுக்கு அளவில்லாமல் இருந்தது. ஆனால், எட்டு மாதத்துக்கு முன்பு திருநாவுக்கரசரைப் பார்ப்பதற்காகக் காஞ்சிக்குப் போய்த் திரும்பியதும், முதன் முதலாக மாமல்லர் தனக்கு எழுதிய ஓலையை



நினைவுபடுத்திக் கொண்டாள். "அரண்மனை நிலா மாடத்தில், முத்துப் பதித்த பட்டு விதானத்தின் கீழே, தங்கக்கட்டிலின் மேல் விரித்த முல்லை மலர்ப்படுக்கையில் படுத்துறங்க வேண்டிய நீ, என்னுடைய ரத சாரதியின் வீட்டில் தரையிலே விரித்த கோரைப்பாயில் படுத்துறங்கினாய் என்பதை எண்ணி எண்ணி என் மனம் புண்ணாகிறது!" என்று பல்லவகுமாரர் எழுதியிருந்

தார். இதிலே, அவர் சிவகாமியிடம் கொண்டிருந்த காதலின் மேன்மையும் வெளியாயிற்று; கண்ணபிரான் வீட்டிலே வந்து சிவகாமி தங்குவதை அவர் அவ்வளவாக விரும்பவில்லையென்பதும் புலனாயிற்று.

இதைப்பற்றிச் சிவகாமியின் உள்ளத்தில் ஒரு போராட்டம் நடந்தது. கமலியிடம் அவளுக்கிருந்த நட்புணர்ச்சியும் பல்லவ குமாரரிடம் அவள் கொண்டிருந்த காதல் வெறியும் போராடின. முடிவிலே, காதல் தான் வெற்றி, பெற்றது.

"ஆகா! எத்தகைய பேதை நாம்! மகிதலம் போற்றும் மண்டலாதிபதியின் குமாரரிடம் காதல் கொள்ளத் துணிந்துவிட்டு, அவருடைய கௌரவத்துக்குப் பங்கம் விளையக்கூடிய காரியத்தைச் செய்தோமே!" என்று வருந்தி, இனிமேல் பல்லவ குமாரரின் விருப்பம் தெரியாமல் காஞ்சிக்கே போவதில்லையென்று தீர்மானித்திருந்தாள். ஆகையினாலேதான் மேற்கண்டவாறு சொன்னாள்.

அதற்கு மறுமொழியாக ஆயனர் கவலை தொனித்த குரலில் கூறினார்: "என்ன இருந்தாலும் மகேந்திர பல்லவர் தீர்க்கமான அறிவு படைத்தவர். அவருடைய கட்டளைக்கு மாறாக நடந்தால் ஏதாவது விபரீதம் வருமோ, என்னவோ? யாரிடமாவது யோசனை கேட்கலாமென்றால், அதற்கும் ஒருவரும் இல்லை. நாகநந்தியடிகளாவது வரக்கூடாதோ? எட்டு மாதத்துக்கு முன்பு போனவர் இன்னும் வரவில்லை. பிக்ஷுவுக்கு என்ன நேர்ந்துவிட்டதோ, என்னவோ?"

ஆயனரின் மனச்சோர்வைக் கவனித்த சிவகாமி அவரை உற்சாகப்படுத்தும் பொருட்டு, மறுபடியும், "அப்பா! நான் நடனம் ஆடி வெகு காலமாயிற்றே! இன்றைக்கு ஆடுகிறேன்; பார்க்கிறீர்களா?" என்றாள்.

"சிவகாமியின் நாட்டியத்தை நானும் பார்க்கலாமா?" என்று ஒரு குரல் கேட்டது.

இரண்டு பேரும் ஏக காலத்தில் திரும்பிப் பார்த்தார்கள். சற்றுத் தூரத்தில் நாகநந்தி அடிகள் நின்று கொண்டிருந்தார்.

"புத்தம் சரணம் கச்சாமி"
"தர்மம் சரணம் கச்சாமி"
"சங்கம் சரணம் கச்சாமி"

என்று நாகநந்தி கோஷித்து முடித்ததும் ஆயனர், "அடிகளே! வரவேணும்! வர



வேணும்! நினைத்த இடத்தில் நினைத்த போது வந்து அருள் செய்கிறவர் கடவுள் தான் என்று பெரியோர் சொல்லுவார்கள். தாங்களும் கடவுள் மாதிரி வந்திருக்கிறீர்கள். உங்களைப்பற்றி இப்போதுதான் பேசிக் கொண்டிருந்தோம்'' என்றார்.

''அப்படியா? இந்தக் காவி வஸ்திரதாரியைப் பற்றி நினைவு வைத்துக் கொண்டிருந்தீர்களா? சிவகாமியின் திருநாவினால் கூட நாகநந்தியின் பெயர் உச்சரிக்கப்பட்டதா? அவ்விதமானால் என்னுடைய பாக்கியந்தான்.... ஆயனரே உங்கள் குமாரியின் புகழ் தேசமெல்லாம் பரவியிருக்கும் அதிசயத்தை நான் என்னவென்று சொல்வேன்? திருவதிகைக்கும் தில்லைக்கும் போனேன்! உறையூருக்குப் போனேன்; வஞ்சிக்குப் போனேன்; நாகைக்கும் போயிருந்தேன்; இன்னும் தெற்கே மதுரையம்பதிக்கும் கொற்கைத் துறைமுகத்துக்கும் சென்றிருந்தேன். எங்கே போனாலும், எனக்கு முன்னால் சிவகாமியின் புகழ் போயிருக்கக் கண்டேன். காஞ்சியிலிருந்து நான் வந்ததாகத் தெரிந்ததும் எல்லாரும் சிவகாமியின் பரத நாட்டியக் கலையைப் பற்றியே கேட்டார்கள். புத்த பிக்ஷுக்களும் ஜைன முனிவர்களும் கேட்டார்கள். சைவப் பெரியார்களும் வைஷ்ணவ பக்தர்களும் கேட்டார்கள். உறையூரில் சோழ மன்னர் கேட்டார். நாகப்பட்டினத்திலே சீன தேசத்திலிருந்து வந்திருக்கும் சித்திரக்காரர்கள் கேட்டார்கள். ஆயனரே! இப்பேர்ப்பட்ட கலைச்செல்வியைப் புதல்வியாகப் பெற நீர் எவ்வளவோ பாக்கியம் செய்திருக்க வேண்டும்...''

இவ்வாறு, புத்த பிக்ஷு, சொன்மாரி பொழிந்து வருகையில் ஆயனரும் சிவகாமியும் இடையில் பேசச் சக்தியற்றவர்களாகப் பிரமித்து நின்றார்கள். கடைசியில் நாகநந்தி, ''ஓ மகா சிற்பியே! சென்ற எட்டு மாதத்திற்குள் சிவகாமியின் நடனத் திறமை இன்னும் எவ்வளவோ வளர்ந்திருக்க வேண்டுமே? தென்னாடெல்லாம் புகழும் நடன ராணியின் நாட்டியத்தைப் பார்க்கும் பாக்கியம் இன்று எனக்குக் கிட்டுமா?'' என்றார்.

நாகநந்தியின் விஷயத்தில் சிவகாமியின் மனப்பாங்குகூட அவருடைய புகழுரைகளினால் ஓரளவு மாறி விட்டது. எனவே ஆயனர், ''ஆடுகிறாயா, அம்மா?'' என்று கேட்டதும், உடனே, ''ஆகட்டும் அப்பா!'' என்றாள் சிவகாமி.

மடவரும்வீட்டுக்குச் சென்றதும், சிவகாமி ஒரு நொடியில் நடன உடை தரித்துக் கொண்டு நாட்டியத்துக்கு ஆயத்தமாக வந்து நின்றாள். அவளுடைய முகத்திலும் மேனி முழுவதிலுமே ஒரு புதிய ஆனந்தக் கிளர்ச்சி காணப்பட்டது. மாமல்லரின் காதல் கனிந்த மொழிகளும், அவளுடைய கலைச் சிறப்பைக் குறித்து நாகநந்தி கூறிய புகழுரைகளும் அத்தகைய கிளர்ச்சியை உண்டு பண்ணியிருந்தன.

ஆயனர் போட்ட தாளத்துக்கிசையச் சிவகாமி நிருத்தம் ஆட ஆரம்பித்தாள். அதில் பாட்டு இல்லை. பொருள் இல்லை. உள்ளக் கருத்தை வெளியிடும் அபிநயம் ஒன்றும் இல்லை.

ஒரே ஆனந்தமயமான ஆட்டந்தான்.

சிவகாமியின் ஒவ்வோர் அங்கத்திலும் ஒவ்வோர் அங்கத்தின் அசைவிலும் அந்த ஆனந்தம் பொங்கி வழிந்தது.

ஆஹா! அந்த ஆனந்த நடனத்திலே எத்தனை விதவிதமான நடைகள்? மத்த கஜத்தின் மகோன்னதமான நடை, பஞ்ச கல்யாணிக் குதிரையின் சிருங்கார நடை, துள்ளி விளையாடும் மான் குட்டியின் நெஞ்சையள்ளும் நடை, வனம் வாழ்மயிலின் மனமோகன நடை, அன்னப் பட்சியின் அற்புத அழகு வாய்ந்த நடை! இவ்வளவு நடைகளையும் சிவகாமியின் ஆட்டத்திலே காணக் கூடியதாயிருந்தது.

ஆட்டம் ஆரம்பித்துச் சிறிது நேரத்துக்கெல்லாம் சிவகாமி நடனம் ஆடுவதாகவே தோன்றவில்லை. தன் செயல் என்பதையே இழந்து அவள் ஆனந்த வெள்ளத்தில் மிதந்து கொண்டிருப்பதாகவே தோன்றியது. ஆயனரும் தம்மை மறந்த, கால எல்லையையெல்லாம் கடந்த காலாதீதமான மன நிலைக்குப் போய்விட்டார்.

(தொடரும்)

''ஏற்கெனவே வெளிவந்த ஜோக்கை மறுபடி எழுதறது தப்புன்னு நினைச்சு, எழுதாமல் விட்டது தப்பாப் போச்சு.''

''ஏன் அப்படி?''

''அதையே, வேற ஒருத்தர் எழுதிட்டாரே!''

— வி. ரேவதி.






**பரிசு ரூ. 40,000**

# கல்கி பொன்விழா நாவல் போட்டி

| | |
|---|---|
| சரித்திர நாவலுக்குப் பரிசு (சுமார் 52 இதழ்கள்) | ரூ. 20,000/– |
| சமூக நாவலுக்குப் பரிசு (சுமார் 26 இதழ்கள்) | ரூ. 10,000/– |
| மர்ம நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. 5,000/– |
| விஞ்ஞான நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. 5,000/– |

**முடிவு தேதி: ஆகஸ்டு 31, 1991**

- இதற்கடுத்த பத்து மாதங்களில் நாவல்களின் பரிசீலனை முடிந்து கல்கி பொன்விழாச் சிறப்பிதழில் முடிவு வெளியாகும். பரிசு பெற்ற நாவல்களுள் ஒன்று அதே சிறப்பிதழில் ஆரம்பமாகும். அதாவது 1992 ஆகஸ்டு முதல் வார இதழ்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படும் இதர நாவல்களுக்கு வழக்கமான சன்மானம் அளிக்கப்படும்.
- நடுவர் குழு நாவல்களைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய நாவல்களைத் தேர்ந்தெடுக்கும்.
- கல்கி பொன் விழா நாவல் போட்டிக்கு அனுப்பப்படுவதாகத் தெளிவாகக் குறிப்பிடுதல் அவசியம்.
- பிரதி வாரமும் படத்துடன் சேர்த்துக் கல்கியில் 4 – 5 பக்கங்களுக்கு மேற்படாதபடி அத்தியாயங்களின் அளவை நிர்ணயிப்பது நல்லது.
- கடிதப் போக்குவரத்து கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத நாவல்களைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலைகள் இணைக்க வேண்டும்.
- அப்படித் திருப்பி அனுப்பவே அவசியம் நேராதபடி அற்புதமான நாவல்களை எழுதி அனுப்பிக் கல்கி பொன்விழா ஆண்டினைச் சிறப்பிக்குமாறு எழுத்தாளர் பெருமக்களை வேண்டுகிறோம்.

— ஆசிரியர், கல்கி, சென்னை – 600 032.

# கறவை

காடு வெட்டியாருக்கு நாற்காலி கொண்டு வந்து ஒருவன் களத்தில் போடும் போதுதான் கான்ஸ்டபிள் வந்தார்.

காலையில் காப்பி, பலகாரம் முடித்துக் கொண்டு, அமர்த்தலாக ஏப்பம் விட்ட வாறே பண்ணை வீட்டிலிருந்து கீழே இறங் கும்போதே காடு வெட்டியார் பார்வை கான்ஸ்டபிள் மேல் பட்டு விட்டது.

அதைக் கண்டுகொள்ளாமல் வைக்கோல் போர் போட்டுக் கொண்டிருந்தவர்களிடம் ஓர் அதட்டல். சாக்கில் அறுவடை நெல் அளந்து நிரப்புகிறவனிடம் ஒரு விசாரிப்பு. தலையைச் சொறிந்து நின்ற டிராக்டர் டிரை வரிடம் ஒரு சீறல்... இத்தனையும் நடத்திக் கொண்டு தான் அடி அடியாக நாற்காலியை நோக்கி முன்னேறினார்.

இடையிடையே மாட்டுத் தொழுவத்தில் முண்டாசை அவிழ்த்து இடுப்பில் கட்டி நின்ற மாட்டுக்காரன் மயில்சாமியை அரைக் கண்ணால் பார்த்துக் கொண்டார்.

நாற்காலியை நெருங்கிய போதுதான், கான்ஸ்டபிளைக் கவனிக்கிற மாதிரி காட்டிக் கொண்டார். பஞ்சாயத்து பிரசிடெண்ட் அல்லவா!

''வணக்கம் சார்.''

''ஓ போலீஸ்காரரா...., வாங்க வாங்க...'' என்று நாற்காலியில் உட்கார்ந்தார்.

வெறும் கான்ஸ்டபிள்தானே இரண்டு மூன்று நிமிஷம் நிற்கட்டுமே என்று மனசிற் குள் ஒரு கணக்குப் போட்டு விட்டுப் பேசத் தொடங்கினார்.

''எங்கே ரொம்ப தூரம்?''

''மாடு காணாமப் போச்சுன்னு கம்ப்ளெய்ண்ட் கொடுத்தீங்களாமே... அது தான் ஐயா அனுப்பிச்சாரு.''

''என்ன, மாடு கெடைச்சுடுச்சா?''

''இல்லீங்களே அதைப் பத்தி வெவரம் விசாரிக்கத்தான் வந்தேன்.''

காடுவெட்டியார் அரைக்கண்ணால் மாட்டுத் தொழுவத்தருகில் நிற்கும் மயில் சாமியைப் பார்த்தார்.

''நிக்கறீங்களே...'' என்று அவர் நிற் பதை அப்போதுதான் கவனித்த மாதிரி, ஒரு குறிப்புக் காட்டி விட்டு, ''டேய் மயில்சாமீ உள்ளார போய் ஒரு ஸ்டூல் கொண்டா!'' என்றார்.

விஷயம் தன்னைச் சுற்றித்தான் வரப் போகிறது என்று மயில்சாமிக்கு நன்றாகத் தெரியும். என்ன பேசப் போகிறாரோ அது தனக்குத் தெரியக் கூடாது என்பதற்காகத் தான் எல்லாரையும் விட்டு விட்டுத் தன்னை உள்ளே அனுப்புகிறார் என்றும் மயில்சாமிக் குத் தெரியும்.

காடு வெட்டியாரைப் பதினெட்டு வருஷ மாகப் பார்க்கிறவனாச்சே அவன்!

''காணாமப் போனது என்ன மாடுங்க?''

''கறவை மாடு.''

''தொழுவத்திலே இருந்து அவுத்துட்டுப் போயிட்டாங்களா?''

''இல்லே. காட்டுக்கு மேய்ச்சலுக்குப் போன மாடு வீடு திரும்பலே.''

''சிறுத்தை கிறுத்தை அடிச்சுருக்குமோ?'' கான்ஸ்டபிள் மெதுவாகக் குரல் தாழ்த்திச் சொன்னார்.

''அதைக் கண்டுபிடிக்கத்தானேங்க நான் ரிப்போர்ட் குடுத்தேன்!'' காடுவெட்டியார் மீண்டும் தான் பிரசிடெண்ட் என்பதை கான்ஸ்டபிளுக்கு நினைவூட்டினார்.

அதற்குள் ஸ்டூலைக் கவிழ்த்துக் கால்கள் மேலே பார்க்க தோள் மேல் வைத்துத் தூக்கி வந்தான் மயில்சாமி.

''காட்டுக்கு மாடு மேய்க்கப் போறது யாருங்க?''

ஸ்டூலைத் தோளிலிருந்து கீழே இறக்கி நிமிர்த்தித் தரையில் வைத்தான் மயில்சாமி.

''இதோ, இவன்தான்!''

''இவனா?''

கான்ஸ்டபிள் மயில்சாமி முகத்தை உற்றுப் பார்த்தார். பார்க்கிற பார்வையி லேயே உண்மையைக் கக்க வைத்து விடுகிற உக்கிரம் தெறித்தது.

''யோவ் நீதான் மாட்டுக்காரனா?''

''ஆமாங்க.''

''உம் பேரு இன்னா?''

''மயில்சாமி.''

அவன் தன் முன் விசாரிக்கப்படுவதை காடுவெட்டியார் விரும்பவில்லை.

''டேய் போய் கான்ஸ்டபிளுக்குக் காப்பி வாங்கிட்டு வா!''

''அதெல்லாம் வேணாங்க...'' என்று நெளிந்தார் கான்ஸ்டபிள்.

''நீ போடா.''

மயில்சாமி தலை மறைந்தது.

''இவன் மேலே ஒங்களுக்குச் சந்தேகமா சார்?''

''இவன் மேலே சந்தேகம்னு சொல்றதுக் கும் இல்லே. சந்தேகமில்லேன்னு சொல் றதுக்கும் இல்லே.''

''ஸ்டேஷனுக்கு இளுத்துக்கிட்டுப் போயி ரெண்டு தட்டு தட்டினாக் கக்கிடறான்!''

''நான் அதைச் சொல்லலே.''

காடுவெட்டியார் திரும்பி, வைக்கோல் போர் போடுகிறவன் முதல், கவனிக்கிற எல்லாரையும் அரைப் பார்வை பார்த்தார். காப்பிக்குப் போன மயில்சாமி இன்னும் வரவில்லை.

''எனக்கு மாடு முக்கியம். அதோ பார்த் தீங்களா? அந்தத் தொழுவத்திலே கட்டியிருக் கிற மாடுங்க எல்லாம் அது போட்ட

ஜெயந்தன்

கன்னுங்க. ரெண்டு மாசத்துக்கு முன்னே கூட ஒரு கன்னுப் போட்டுது. கறந்தா ஒரு வேளைக்கு ரெண்டு லிட்டர் கறக்கும்.''

காடுவெட்டியார் ஒரு சிறு நெடுமூச்சு விட்டார்.

''பால் நஷ்டம் பெரிய நஷ்டம் இல்லே. அது போட்ட கன்னு கூட சமீபத்திலே செத்துப் போச்சு. இன்னும் கொஞ்ச நாள்லே பால் மடிச் சுரப்பு கூட நின்னுடும்.''

''கான்ஸ்டபிள் அவர் என்ன சொல்ல வருகிறார் என்பதைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்.

''இந்தப் பண்ணை சம்பந்தப்பட்ட வரையிலே அது ஒரு முக்கியமான மாடு.''

''கன்னுக்குட்டி செத்த பின்பும் பால் சுரந்திட்டிருந்துதுங்களா?''

''அதான் சொன்னேனே ரெண்டு லிட்டர்!''

''பால் கறக்கிறது யாரு?''

''எல்லாம் அவன்தான் கறப்பான்.''



மத்திய, மாநில அரசுகள் மற்றும் பொதுத் துறையில் 1961 இல் எழுபது லட்சமாக இருந்த ஊழியர்களின் எண்ணிக்கை, இன்று ஒரு கோடியே தொண்ணூறு லட்சமாக உயர்ந்திருக்கிறது. இதனால் நிர்வாகத் திறன் அதிகமாகி விட்டதா என்ன? இல்லையே! அரசு நேரிடையாக ஈடுபடும் துறைகளைக் கட்டுப்படுத்தியிருந்தால், இந்தக் காலகட்டத்தில் இருபது லட்சம் பேர் மட்டுமே அதிகமாக நியமிக்கப்பட்டிருப்பார்கள். ஓர் அரசு ஊழியருக்கு அவருடைய பணிக் காலத்தில் வழங்கப்படும் சம்பளம் சராசரியாக ரூபாய் ஏழு லட்சம். அதிகப்படியாக ஒரு கோடி ஊழியர்களுக்குக் கொடுத்த சம்பளத்தைத் தனியார் துறையில் பயனுள்ள முறையில் முதலீடு செய்திருந்தால், 9 கோடி பேருக்கு வேலை வாய்ப்புக் கிடைத்திருக்கும். வேலையில்லாத் திண்டாட்டத்துக்குப் பதில் வேலைக்கு ஆட்கள் கிடைக்காமல் தேட வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும்.

நன்றி: 'ஹிந்து' (கட்டுரை)

தகவல்: அ. ஷண்முகசுந்தரம்.

அதற்குள் மயில்சாமி காப்பி டபராவுடன் படியிறங்கி வந்தான்.

''இவனை நீங்க விசாரிச்சீங்களா?''

''விசாரிச்சேன். எனக்குத் தெரியவே தெரியாதுங்கிறான்.''

காப்பி டபரா அருகில் வந்தது. அவன் கான்ஸ்டபிளிடம் நீட்டினான். அவர் வாங்கிக் கொண்டார்.

குடித்து விட்டு டபராவைக் கீழே வைத்தார்.

''சார் இவனை ஸ்டேஷனுக்கு அழைச்சுட்டுப் போகணும்.''

''இவன்தான் தெரியவே தெரியாதுங்கறானே!''

''அதை ஸ்டேஷன்லே வந்து சொல்லிடட்டும்.''

மயில்சாமி பேசாமல் நின்றான்.

''என்ன மயில்சாமி!'' என்று காடுவெட்டியார் அபிப்பிராயம் கேட்கிற தோரணையில் குரல் கொடுத்தார்.

''ஐயா.''

''கான்ஸ்டபிள் சொல்றது கேட்டு இல்லே?''

''கேட்டுதுங்க.''

''ஸ்டேஷனுக்குப் போகணுமா?''

அவன் பேசவில்லை.

''என்னடா?''

''எங்கே போனாலும் உண்மை அதுதானுங்களே.''

''வேற வழியே இல்லீங்க. நான் ஸ்டேஷனுக்கு அழைச்சுட்டுப் போறேன்.''

''ஒங்க பிரியம்.''

கான்ஸ்டபிள் மயில்சாமியின் முதுகைத் தள்ளிக் கொண்டு நடந்தார்.

**மா**ட்டுக்கார மயில்சாமி காணாமற் போன அந்தப் பசு மாட்டிற்கு வைத்த பெயர் தனபாக்கியம். எந்தத் தனபாக்கியத்தை நினைத்துக் கொண்டு அந்தப் பெயர் வைத்தானோ தெரியாது. பெயர் நிலைத்து விட்டது.

காடுவெட்டியார் பண்ணையில் பத்து உரு மாடுகள். ஒரு செவலைக் காளை. ஒரு மயிலைக் கண் காளை. மீதி எட்டும் பசு மாடுகள். எல்லாம் மேய்கிற வேளையில் ''தனபாக்கியம்'' என்று குரல் கொடுத்தால் அது திரும்பிப் பார்க்கும்.

மயில்சாமி ''இங்கே வா'' என்று மெதுவாகச் சொன்னால், தயங்கித் தயங்கி நடந்து வந்து, அவனை உராய்ந்து கொடுத்து விட்டுச் சொர சொரவென்று அவன் புறங்கையை நக்கும்.

எங்காவது வெளியூர் போய் விட்டு இரண்டு மூன்று நாள் கழித்து, அவன் பண்ணைக்குத் திரும்பினால் அவன் குரல் கேட்டதும் 'ம்மா ஆஆ' என்று மாட்டுக் கொட்டகையிலிருந்தே அது குரல் கொடுத்துக் குசலம் விசாரிக்கும்.

'எங்கே போய்ட்டே? எப்ப வந்தே? இப்படி ரெண்டு மூணு நாள் நான் என்ன பாடுபட்டுட்டேன் தெரியுமா?' இவ்வளவும் அந்த முதல் கத்தலில் தொனிக்கும்.

''அதான் வந்துட்டேன் இல்லே...'' என்று ஓர் அதட்டல் போட்டு விட்டு, அரை மணி நேரம் வேறு கைக் காரியம் பண்ணிக் கொண்டிருந்தால், அதற்குப் பொறுக்காது. மறுபடி மறுபடி குரல் கொடுத்துக் கொண்டிருக்கும்.

கிட்டே போய் அதன் கழுத்தைத் தடவிக் கொடுத்து, நெற்றியை நீவி விட்டு, உடம்பைப் பிசைந்து விட்டு, மேல் தோல் துடிக்கிற மாதிரி இரண்டு தட்டுத் தட்டினால்தான் அதற்கு ஆறுதல்.

ஒரு நாள் அது குளுத்தியில் கரைத்து வைத்த கழுநீரைக் குடிக்காமல் போய் விட்டால், அவனுக்கு மனசு விட்டுப் போய் விடும். அது உடம்புக்கு வந்து படுத்து விட்டால் மாட்டாஸ்பத்திரிக்கும், கால்நடை உதவியாளரிடமும் அவன்தான் சைக்கிள் போட்டுக் கொண்டு அலைவான்.

இப்படியெல்லாம் இருந்த மயில்சாமியா அந்த மாட்டை விற்றிருப்பான்? காடுவெட்டியாரால் நம்ப முடியவில்லை.

ஆனால் அடி மனசு மாடு காணாமல் போனதுக்கும் மயில்சாமிக்கும் என்னவோ தொடர்பு என்று ஊர்ஜிதம் செய்தது.

மறுநாள் இரவு வரை மயில்சாமி வரவில்லை.

லாக்கப்பில் அவனைச் செமத்தியாக அடித்து நொறுக்கினார்கள் என்று செய்தி மட்டும் வந்தது.

காடுவெட்டியார் போய்ப் பார்க்கவில்லை. பார்த்து மனமிரங்கினால் காரியம் கெட்டு விடும். அதற்காகவே தவிர்த்தார்.

**அ**டுத்த நாள் காலையில் காடுவெட்டியாருக்குக் களத்திலே நாற்காலி போடும் வேளையில் மீண்டும் கான்ஸ்டபிள் வந்தார்.

இன்று ஸ்டூல் கொண்டு வந்தது டிராக்டர் டிரைவர். காப்பி வரவில்லை. மறக்கப்பட்டதா தவிர்க்கப்பட்டதா தெரியவில்லை.

''என்னாங்க கான்ஸ்டபிள்?''

''ஐயா வணக்கம்.''

''வணக்கம், வணக்கம்.''




# மிருதுவான போஷாக்கு

**உங்கள் குழந்தைக்கு 4 மாதங்களாகும் சமயத்தில் அவனது இயற்கை உணவான பாலுடன் எளிதில் ஜீரணிக்க உகந்த போஷாக்கு உணவான நெஸ்டத்தையும் கொடுங்கள்.**

பாலுடன் கலந்து தயாரிக்கப்பட்ட நெஸ்டம் உங்கள் குழந்தையின் மிருதுவான முதல் திட உணவாகும். ஏனெனில் இதில் குழந்தை ஆரோக்கியமாய் வளர்வதற்குரிய எல்லா போஷாக்குகளும் சமச்சீர் அளவில் அடங்கியுள்ளன. உங்கள் குழந்தையின் உணவில் வெவ்வேறு சுவையைக் கூட்ட விரும்பினால், அவ்வகை உணவுடன் நெஸ்டத்தை கலந்து கொடுங்கள். உதாரணமாய் வேக வைத்த பழங்கள், வேகவைத்து மசிய வைத்த காய்கறிகள் மற்றும் பருப்பு வகைகள்.

அரிசி சேர்த்த நெஸ்டம், போஷாக்கு நிறைந்த சீரியல் ஆகும். உங்கள் குழந்தை இதை எளிதில் ஜீரணிக்கும். உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு மருத்துவர்கள் சிபாரிசு செய்யும் எல்லாவித போஷாக்கும் இதில் உள்ளன. உறுதியான எலும்புகளுக்கும் பற்களுக்கும் தேவையான கால்ஷியம்; ஆரோக்கியமான ரத்தத்திற்கு தேவையான இரும்பு சத்து; பட்டு போல் பளபளக்கும் சருமத்திற்கும், ஒளிவீசும் கண்களுக்கும், நோய் எதிர்ப்பு சக்திக்கும் தேவையான வைட்டமின்களும் இதில் அடங்கியுள்ளன.

உங்கள் செல்லக் குழந்தை நெஸ்டத்துடன் சேர்ந்து வளர்வதை கவனியுங்கள்.

இலவச நெஸ்டம் செய்முறை புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25, புது டில்லி-110016.

எளிதில் ஜீரணிக்க வல்ல பேபி சீரியல்.

**நெஸ்டம்**

காடுவெட்டியார் மேல் துண்டால் முகத்தில் பூத்த வியர்வையைத் துடைத்துக் கொண்டார். பின்னர் கான்ஸ்டபிளுக்குக் கனிந்தருளல் போல் ஒரு குறுஞ்சிரிப்பு வழங்கினார்.

''என்ன விசேஷம்.. என்ன சொல்றான் மயில்சாமி?''

''ஒத்துக்கிட்டாங்க.''

''ஒத்துக்கிட்டானா?''

''ஆமாங்க.''

''அடி ஒதை பொறுக்காம என்னமோ சொல்லி வைப்போம்னு ஒத்துக்கிட்டானோ?''

''இல்லிங்க. பக்கத்து ஊரு மாடுங்க மேய்ச்சலுக்கு வந்தப்போ ஏதோ ஒரு தாய் தவறிப் போன கன்னுக்குட்டி இதும் மடியை முட்டியிருக்கு. அது பால் குடிக்க இந்த மாடும் சுரப்பு விட்டிருக்கு. அரை அவுரு. இவன் ஒங்க மாட்டுக் கழுத்திலே இருந்த மணியை அவுத்து. அந்த மந்தையோட சேத்து அடித்து விரட்டியிருக்கான்.''

''விக்கலே?''

''இல்லே.''

''எந்த ஊரு மாடு அது?''

''டவுன் மாடுங்க. கணவாய் ஏறி மேய்ப்புக்குக் கொண்டு வந்து விட்டிருக்காங்க.''

''கண்டுபிடிக்க முடியுமா?''

''கஷ்டமுங்க. டவுன்ல எங்கே போய் எங்க பாக்க?''

காடுவெட்டியார் யோசனையில் ஆழ்ந்தார். அவர் யோசனையைக் கலைக்காது கான்ஸ்டபிள் சற்று சும்மா இருந்து தொடர்ந்தார்.

''ஒத்துக்கிட்டான். கேஸ் புக் பண்ணிடலாமா?''

''என்ன சொல்றான் எளவு எடுத்தவன்?''

''இவ்வளவு நாள் கன்னுக்குட்டி உயிரோட இருக்கறப்ப அதுக்குப் பாலை விடாமே ஒட்டக் கறக்கச் சொல்வாங்களாம். இப்ப அது செத்துப் போச்சு. மாட்டுக்கு ஆனா இந்த வயசுக்கப்பறமும் ஒட்டக் கறடாண்ணா அந்த மாட்டு மேலே அவன் வச்சிருக்கிற பாசம் அவனை ரொம்பக் கலக்கிட்டிருக்கு.''

கான்ஸ்டபிள் கொஞ்சம் இடைவெளி கொடுத்துத் தொடர்ந்தார்.

''கன்னுப் போட்ட மாடு செத்திட்டுது. ஒங்க மாட்டுக் கன்னு செத்திட்டுது.''

காடுவெட்டியார் குறுக்கிட்டார்.

''இவரு பெரிய தர்மதுரை. உடனே மொதலாளி மாட்டை தானங் குடுத்திட்டாரோ?''

கான்ஸ்டபிள் பதிலளிக்கவில்லை.

இரண்டு மூன்று பேச்சுக் குரல்கள் பண்ணையில் எந்த முகாந்திரமாகவோ பேசுவது கேட்குமளவு அமைதி நிலவியது. ஒரு நிமிஷம்.

தொண்டையைக் கனைத்துக் கொண்டு காடுவெட்டியார் பேசினார்.

''அவனை விட்டுடுங்க. நான் கொடுத்த புகாரை வாபஸ் வாங்கிக்கறேன்.''

முருகா!

என்னே உன் திருவிளையாடல்!

உன் மீது பக்தியையும் மிருகங்களின் மீது நம்பிக்கையையும் வைத்துப் படம் எடுத்த தேவர் போல் படம் எடுக்க இனி யார் இருக்கிறார்கள் என்று கேட்டால்... 'இதோ! நான் இருக்கிறேன்' என்று சவால் விடுகிறாரே இயக்குனர் இராம. நாராயணன்.

ஒரு சின்ன மாற்றம். யானைக்கும் குதிரைக்கும் பதிலாக முழுக்க முழுக்கப் பாம்பை மட்டுமே நம்ப. அது ஏமாற்றாமல் கை கொடுத்திருக்கிறது.

செய்தி பதிவு செய்யப்பட்ட ஆடியோ கேஸட்டை வாயில் கவ்விக் கொண்டு அக்காவுக்கும் தம்பிக்கும் இடையே தூது





போவது என்ன... மசக்கைக்கு உட்பட்டு விட்ட அக்காவுக்கு மாங்காய் கொண்டு போய்க் கொடுப்பது, என்ன என்ன... 'வளைகாப்பு நடத்த வக்கில்லை' என்று அவள் கணவன் அவமானப்படுத்த, அதைப் புரிந்து கொண்டு கடையிலிருந்து ஒரு கொத்து வளையல்களைக் கொண்டு போய் அவள் கையில் கொடுப்பது என்ன என்ன என்ன.... நடக்கப் போகும் ஒரு கொலையைத் தடுக்க அந்த அடியாள் கொலை செய்ய விருந்த வீட்டு எண்ணை டைப் செய்து தருவது என்ன என்ன என்ன என்ன.... (கே.பி. சுந்தராம்பாள் எங்கே இருந்தாலும் மன்னிப்பாராக.)

அந்தக் குழந்தை பேபி ஷாமிலி... முன் பாதியில் தம்பியாகவும் பின் பாதியில் மகனாகவும் இடம் பெற்றுக் கவனத்தைச் சிதற விடாமல் கட்டிப் போட்டு விடுகிறது. அழகும் நடிப்பும் கொஞ்சுகிறது போங்கள்!

களவுபோன அம்மன் நகைகளைக் கண்டு பிடித்துக் கோயிலில் சேர்ப்பிக்க வேண்டும் என்கிற ஒரே காரணத்துக்காக, அதைத் திருடிவிட்டதாகக் கருதப்படும் நாசரைக் காதலிப்பதாக நடித்து, கல்யாணம் என்கிற தற்கொலைக்கொப்பான முடிவை மேற் கொண்டு, பின்னர் அவரை ஒரு பக்தனாக மாற்றுவது என்று 'மங்கம்மா சபதம்' எடுக்கும் பானுப்ரியாவுக்குக் கண்கள் பெரும் ஒத்துழைப்புத் தருகிறது

# தைப் பூசம்

என்றால் —

தொடர்ந்து சட்டத்துக்குப் புறம்பான காரியங்களிலேயே ஈடுபட்டு, அவ்வப்போது பானுப்ரியாவின் மனத்தை உடைத்துச் சுக்கு நூறாக்கும் நாசருக்கு வில்லத்தம் அளவெடுத்துத் தைத்த சட்டை.

சித்தராக நம்பியார். சிவாஜி பாணியில் பேசிச் சிரிக்க வைக்கும் செந்தில்.

பொருத்தமான இடங்களில் திருப்புகழ்.
நனைய வைக்கும் நாதசுர மழை.
மனத்தை நிறைக்கும் பக்திப் பாடல்கள்.
காது குளிரக் கர்நாடக இசை.

எல்லாம்சரி, இது புராண சமூகப் படமா? அல்லது சமூகப் புராணப்படமா? கதை? லாஜிக்?

மூச்! இப்படியெல்லாம் அசட்டுக் கேள்விகள் கேட்கக் கூடாது.

நம்பினவர்களுக்கு ஐயன்.
நம்பாதவர்களுக்குப் பையன்.
முருகா!

— சி. ஆர். கே.

# ஆகாசத் தாமரை

7

மஞ்சுளா கைக்கடிகாரத்தைப் பார்த்தாள். மணி 9.50. ஆபீசுக்குப் போயாக வேண்டும். பத்தரை மணிக்கு ஒரு முக்கியமான மீட்டிங். துருவ் இன்னும் எழுந்திருக்கவில்லை. நேற்றிரவு அவன் வெகுநேரம் கழித்து வந்ததாக உத்தம் சிங் சொன்னான். எங்கே போயிருந்திருப்பான்?

நேற்றிரவு அவள் சன்னாவுக்கு ஃபோன் செய்து, கச்சேரி உண்டு என்று சொல்லி விட்டாள். அவனும் மந்திரி வர ஒப்புக் கொண்டு விட்டதாக இன்று காலை தகவல் சொன்னான். அவள் தேர்ந்தெடுத்த இருபது பேரை விருந்துக்கும் கச்சேரிக்கும் வரும்படி ஃபோன் செய்து விட்டாள். இதை துருவ்வுக்குச் சொல்லியாக வேண்டும்.

அவள் வேகமாக மாடியேறிச் சென்றாள்.

''துருவ்.''

அவன் தன்னறைக் கதவருகே நின்றான்.

''நீ நேற்று ராத்திரி லேட்டா வரக் காரணம்?''

துருவ் பதில் கூறவில்லை.

''இன்று சாயந்திரம் எல்லாரையும் கூப்பிட்டிருக்கேன். இருபது பேர் வருவா.''

அவன் தொடர்ந்து பேசாமலிருந்தான்.

''ஆறரை மணிக்குன்னு சொல்லியிருக்கேன், சரியா?''

மௌனம்.

''நீ ரெண்டு மணி நேரம் வாசிக்கலாம், அப்புறம் சாப்பாடு.''.

அவன் திரும்பித் தன்னறைக்குள் சென்றான்.

''என்ன பதில் சொல்லாம பே..றே, கச்சேரி உண்டா, இல்லையா, நான் உன் பேச்சை நம்பி எல்லாரையும் கூப்பிட்டிருக்கேன்.''

''நான் என்ன பதில் சொல்லணும்னு நீ எதிர்பார்க்கிறே?''

''அப்படீன்னா? நீதானே கச்சேரி செய்யறேன்னு நேத்திக்கி ஒப்புத்துண்டே?''

''இருக்கலாம்; அது **நேத்திக்கி**'' என்று 'நேத்திக்கி' என்பதில் அழுத்தம் கொடுத்தான்.

''ஸோ... இன்னிக்கு?''

''ஐ டோன்ட் நோ.''

''துருவ்... நீ செய்யறது நன்னாயில்லே. நீயா நேத்திக்கி என்கிட்டே வந்து சுபாவமாப் பேசிண்டிருந்தே. கச்சேரி செய்யறதாவும் 'ப்ராமிஸ்' பண்ணினே.... இப்போ நீ இப்படிச் சொன்னால் என்ன அர்த்தம்?''

''ஐ டோன்ட் நோ.''

''நீ நேற்று ராத்திரி எங்கே போயிருந்தே? நான் உன் அம்மா... உன்னுடைய பிரச்னையை என்கிட்டே சொல்லக் கூடாதா?''

''நான்தான் என்னுடைய பிரச்னை. உன்னாலே என்ன செய்ய முடியும்?''

''ப்ளீஸ்... நேத்திக்கி என்கிட்டே ஃப்ரீயாப் பேசிண்டிருந்தியே, அந்த மாதிரி இப்பவும் பேசக் கூடாதா, ப்ளீஸ்...''

அவன் கைகளைக் கட்டிக் கொண்டு, ஒரு வெட்டவெளிப் பார்வையுடன் நின்று கொண்டிருந்தான்.

மஞ்சுளா கைக்கடிகாரத்தைப் பார்த்தாள். ''மைகாட்! எனக்கு நேரமாயிடுத்து. பத்தரை மணிக்கு ஒரு 'மீட்டிங்' இருக்கு... நீ சொல்லு இப்போ, சாயந்திரம் வீணை வாசிக்கப் போறியா, இல்லையா?''

''உனக்கு 'மீட்டிங்'தான் முக்கியம். பணம், பணம், இன்னும் பணம்... உனக்கு வீணையைப் பத்தி ஏன் கவலை? ப்ளீஸ் கோ அவே.'' என்றான் துருவ்.

மஞ்சுளா அசாத்திய கோபத்துடன் அவனருகில் வந்து நின்றாள். ''இந்தப் பணம் தர்ற பாதுகாப்பு இல்லாட்டா, உன்னாலே, நீ இப்போ இருக்கியே, இந்த மாதிரி விட்டேத்தியா இருக்க முடியுமா? பணம் இல்லாட்டா, அடுத்த வேளைச் சோறை அடைய முடியாது. உன் கவலையெல்லாம் அதைப் பற்றித்தான் இருக்கும்.''

அவள் இவ்வாறு சொன்னதும், துருவ் அவளைக் கண்ணுக்குக் கண் நேராக உற்றுப் பார்த்தான். அந்தப் பார்வையின் தீட்சண்யம் அவளைச் சிறிது அச்சுறுத்தியது.

''எஸ்... யு ஆர் டாம்(ட்) ரைட்'' என்று அவன் வாய் முணுமுணுத்தது. சில விநாடிகள் கழித்து, அவன் சிரிக்க ஆரம்பித்தான். சிரிப்பதை நிறுத்திவிட்டு, தனக்குத் தானே பேசிக் கொள்வது போல் சொன்னான்:

''எஸ்... நான் பணம் இல்லாட்டா என்ன செய்திருப்பேன்? நீ பணம், பணம்னு மேலே பறக்கிறதினாலேதான், என்னாலே, அந்தப் புஷ்ப விமானத்திலே ஏறிண்டு, சாதனை

இந்திரா பார்த்தசாரதி

யின் எல்லை நிலம் என்னன்னு தேடிண்டு அலைய முடியறது. எஸ்... யு ஆர் ரைட்... நீ இல்லாட்டா, ஐ ஆம் எ நோ படி, எ நான் பர்ஸன், மூர்த்தி நேத்திக்கிச் சொன்ன மாதிரி எனக்கு என்ன தகுதி இருக்கு? உலகத்தைப் பொறுத்தவரையில் நான் என்னை உலகத்துக்கு நிரூபிச்சுண்டாகணும்... ஆனா எனக்கு அப்படித் தோணவேயில்லையே, நான் என்ன செய்ய முடியும்?''

மஞ்சுளா அவன் தோள் மீது கை வைத்துக் கொண்டு கேட்டாள்: ''நீ நேத்திக்கி மூர்த்தியைப் பார்க்கப் போனியா?''

அவன் பேசாமலிருந்தான்.

''மூர்த்தி ஈஸ் எ ட்ரங்கர்ட்... ஒரு குடிகாரன் பேச்சைக் கேட்டு நீ ஏன் இப்படி அப்செட் ஆகணும்? சந்தியாவுக்கு உன் பேரிலே அசாத்திய மரியாதை.''

''டோன்ட் டாக் ரப்பிஷ்... நான் அப்செட் ஆனேன்னு யார் சொன்னா? நான் என்னைப் பற்றியே யோசிச்சுப் பார்க்கிறேன். நான் அப்செட் ஆறது என்னாலேயேதானே தவிர, இதுக்கு வேறு யாரும் காரணமில்லே. சந்தியா என் பேரிலே மரியாதை வச்சிருக்கிறது உண்மையாயிருந்தால், இது அவ எவ்வளவு பலஹீனமானவன்னு காட்டறது... ஐ கான்ட் ரெஸ்பெக்ட் சச் கேர்ல்ஸ்...'' என்று சிறிது ஆவேசம் வந்தவன் போல் கத்தினான் துருவ்.

''வாட் ஹாஸ் ஹாப்பென்ட் டு யூ?'' என்றாள் மஞ்சுளா.

''ஐ ஆம் ஸாரி'' என்று சொல்லிக் கொண்டே அவன் தன்னறையில் கட்டிலில் உட்கார்ந்தான்.

மஞ்சுளா அவனையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள். இவன் பிரச்னை என்ன? சந்தியா இவன் மீது மரியாதை வைத்திருப்பது உண்மையானால், அவள் பலஹீனமானவள் என்று இவன் சொல்வதற்கு என்ன காரணம்? அவளை இவன் அவமானப்படுத்தியிருப்பானோ? நேற்று மூர்த்தி வீட்டில் என்னதான் நடந்திருக்கும்? சந்தியாவை இவன் விரும்பு



கிறான், சந்தேகமில்லை. ஆனால், அதே சமயத்தில் அவள் தன்னை இவனிடம் கவய மாக்கிக் கொள்வதை இவன் விரும்ப வில்லை. இதுதான் இவன் பிரச்னை. சந்தியாவிடம் இதைப் பற்றிப் பேசுவ தென்று மஞ்சுளா தீர்மானித்தாள்.

''உனக்கு வாசிக்க இஷ்டமில்லாட்டா உன்னை நான் வற்புறுத்த விரும்பலே. இன்னிக்குச் சாயந்திரம் ப்ரோக்கிராமைக் கான்ஸல் பண்ணிடறேன்'' என்றாள் மஞ்சுளா.

''வாசிக்கிறேன்.''

''என்ன சொல்றே?''

''வாசிக்கிறேன். ஆனா, தயவு செய்து வர்றவங்களை எனக்கு அறிமுகம் செய்து வைக்காதே. என்னோட 'மூட்' மாறிப் போனாலும் போகலாம்.''

மஞ்சுளாவின் மனத்தில் ஒரு நெருடல். மந்திரி வருகிறார், அவரை அறிமுகம் செய் யாமலிருக்க முடியுமா? அவர் தப்பாக நினைத்துக் கொண்டால்? சன்னானாவிடம் சொல்லிச் சமாளித்துக் கொள்ள வேண்டி யதுதான்.

''சந்தியாவைக் கூப்பிடு.'' என்று அவன் சொன்னதும், அவள் திடுக்கிட்டு அவனைப் பார்த்தாள்.

உண்மையாகவே கூறுகின்றானா, அல்லது அவள் இதற்கு என்ன பதில் சொல்லப் போகிறாளென்று பரீட்சை பார்க்கின்றானா? — சந்தியா இவள் கூப்பிட்டு வந்து விட்டாளானால், அவள் நிச்சயமாகவே பலஹீனமானவள்தான் என்று உறுதிப்படுத்திக் கொள்வதற்கா கவா? இவனை எப்படிப் புரிந்து கொள்வது?

''சரி... கூப்பிடறேன்... பட் டோண்ட் லெட் மீ டௌன்... ப்ளீஸ்.''

துருவ் எழுந்து வீணையருகே சென்றான்.

விற்பனை அதிகரிப்புக் கூட்டம் முடி வடையும் போது மணி ஒன்று. சற்றுச் சோர் வாக நாற்காலியில் சாய்ந்தாள் மஞ்சுளா. டெலிபோன் ஒலித்தது.

''பத்மநாபன், 'மிஸ்டரி ஸால்வ்' ஆயி டுத்து.''

''என்ன மிஸ்டரி?''

''ஹரிகிஷன்... அவன் 'செக்ரட்டரி' இருக்காளே, அந்தச் சிந்திப் பொண்ணு, அவளுக்குச் சன்னானாவோட 'லிங்க்' இருக்கு.''

''அதெப்படி முடியும்? ஆறு வருஷமா வேலை செய்யறா... ஐ காண்ட் பிலிவ் இட்,'' என்றாள் மஞ்சுளா.

''ஐ ஆம் ஸாரி... இதுதான் உண்மை. ஹரிகிஷனையும் சன்னானா வாங்கியிருக்க லாம். இப்போ நம்ப முடியாத சமாசாரம்னு எதுவுமே கிடையாது.''

''ஹரிகிஷன் எவ்வளவு விசுவாசமா இருந்தான்? இதென்ன அநியாயம்?''

''லாபந்தான் நியாயம், நஷ்டந்தான் அநி யாயம், இதுதான் வியாபார உலகம், சரி. இப்போ நாம எதுவும் தெரிஞ்சுண்டதாக் காமிச்சுக்க வேணாம், அப்புறம் பார்த்துக்க லாம், கச்சேரி இன்னிக்கு உண்டா?''

''உண்டு... மைகாட்... நான் முக்கியமா ஒருத்தருக்கு ஃபோன் பண்ணணும். மறந்தே போச்சு... நாம அப்புறம் பேசிக்கலாம்.''

அவள் சந்தியாவுக்கு ஃபோன் செய் தாள். சந்தியா நல்ல வேளையாக வீட்டி லிருந்தாள்.

''இன்னிக்குச் சாயந்திரம் துருவ் கச்சேரி செய்ய ஒப்புத்துண்டிருக்கான். நம்ம வீட் டிலேதான் நடக்கிறது. ஆறரை மணிக்கு வர்றயா?''

''ஆறரை மணிக்கா? லெட் மி திங்க்...'' என்று சில விநாடிகள் மௌனமாக இருந்து விட்டுப் பிறகு. ''ஓ.கே'' என்றாள்.

மஞ்சுளாவுக்கு மகிழ்ச்சியும் கவலையும் ஒரே சமயத்தில் ஏற்பட்டது. துருவ், அவள் வருகையை எப்படி ஏற்றுக் கொள் வான்?

''சந்தியா... உன்கிட்டே கொஞ்சம் மனம் விட்டுப் பேசலாமா?''

''இத்தனை நாளா எப்படிப் பேசிண் டிருந்தீங்க?''

''இண்டல் இருக்கட்டும்... யு நோ துருவ்,'' என்று ஆரம்பித்தவளை இடை மறித்தாள் சந்தியா:

''ஐ ஆம் ஸாரி. ஐ டோன்ட் நோ துருவ்.''

''நீ சொல்லறதும் வாஸ்தவந்தான். எனக்கே அவனைப் புரிஞ்சுக்க முடியலே... சரி, நேத்திக்கி உங்க வீட்டுக்கு அவன் வந்த போது என்ன நடந்தது?''

''நேத்திக்கு அவர் என் வீட்டுக்கு வந் தாரா? எனக்குத் தெரியாதே?''

அவள் குரலில் தெரிந்த ஆச்சரியம்.



''கதை, திரைக்கதை, வசனம், டைரக் ஷன், பாடல்கள், இசை, தயாரிப்புன்னு பலவிதப் பொறுப்புகளை உங்க படத் துக்கு நீங்களே செய்யறீங்களே... சிரமம் தானே!''

''செய்யப் போனாத்தானே சிரமம்? என் பெயர் மட்டும் போட்டுக்கிற திலே என்ன சிரமம்?''

— ஆனந்தப்ரியா.

பாவனை இல்லை என்று மஞ்சுளாவுக்கு உணர்த்தியது.

''ஒருவேளை ஒங்கப்பா அவனைக் கடுமையாப் பேசியிருப்பாரோன்னு நினைக்கிறேன்.''

''ஐ ஸீ...''

''இன்னிக்கி அவன்கிட்டே பேசினபோது, தெரிஞ்சது. அவனுக்கு 'செல்ஃப் பிட்டி'ங்கிறதே கிடையாது. ஆனால் அவனைக் கண்டு அவனே பரிதாபப் படற மாதிரி இன்னிக்குப் பேசினான். 'அன்யூஷுவல்.' நீ என்ன நினைக்கிறே?''

''அப்பா என்கிட்டே ஒண்ணும் சொல்லலே. நீங்க துருவ்வுக்கு 'செல்ஃப் பிட்டி'ன்னு சொல்லறது வேடிக்கையா இருக்கு.''

''ஆமாம், சந்தியா. அவன் பேசினது அப்படித்தானிருந்தது. நீ இன்னிக்குக் கச்சேரிக்கு வந்தாலும் இன்னொரு ப்ராப்ளம்.''

''என்ன ப்ராப்ளம்...?''

''அவன்தான் உன்னைக் கச்சேரிக்குக் கூப்பிடச் சொன்னான். நீ வந்துட்டா, உன்னை நீ கலபமாக்கிக்கிறயோன்னு அவன் நினைச்சுண்டாலும் நினைச்சுக்கலாம். வரல்லேன்னா வேற மாதிரி ப்ராப்ளம்...''

''ப்ளீஸ்... உங்க பிள்ளை என்னைப் பத்தி என்ன நினைச்சுக்கிறார்ங்கிறதைப் பத்தி எனக்குக் கொஞ்சம் கூட அக்கறை கிடையாது. நீங்க கூப்பிட்டீங்க, வர்றேன்னு சொன்னேன். அவருடைய மதிப்பிலே நான் ஒசந்திருக்கணும்னு எனக்கென்ன கவலை? ஹூ ஈஸ் ஹி?''

''ஐ ஆம் ஸாரி, சந்தியா... அவன் ஒரு 'காம்ப்ளெக்ஸ் பர்ஸன்' நான் எதுக்காக இதைச் சொல்ல வந்தேன்னா...''

''ஆன்ட்டி, ஐ ஆம் நாட் இன்டெரெஸ்டட்... காம்ப்ளெக்ஸ் பர்ஸன்ஸைப் புரிஞ்சுக்க எனக்கு நேரமுமில்லே, பொறுமையுமில்லே:.. நான் அன்னிக்கு உங்ககிட்டே பேசற போது, துருவ்வைப் புரிஞ்சுக்கலாம்னு எனக்கு நம்பிக்கை இருக்குன்னு சொன்னேன், எஸ், ஐ வாஸ் இன்டரெஸ்டட் இன் ஹிம். ஆனா, யோசிச்சுப் பார்க்கிற போது, சிக்கலான ஒருத்தரைப் புரிஞ்சுண்டு, அவரோட 'இன்வால்வ்' ஆறது, என்னோட சுபாவத்துக்கு ஒத்து வராதுன்னு தான் எனக்குத் தோணறது. இந்த ஆடம்பரமெல்லாம் எனக்குக் கட்டி வராது...''

மஞ்சுளா சில விநாடிகள் பேசாமலிருந்தாள். பிறகு சொன்னாள்: ''ஓ. கே... நீ இன்னிக்கு சாயந்திரம் வர்றதும், வராமலிருக்கிறதும் உன் இஷ்டம்.''

''குட். தேர் எண்ட்ஸ் தி மேட்டர்.''

''தாங்க் யூ,'' என்று மஞ்சுளா ஃபோனை வைத்தாள்.

**ஆ**றேகாலுக்குள் அவள் அழைத்திருந்த எல்லா விருந்தினர்களும் வந்துவிட்டனர். மந்திரியும் வந்துவிட்டார். அவன் கேட்டுக் கொண்டபடி, சன்னானா மந்திரியிடம் துருவ்வைப் பற்றிச் சொல்லி விட்டாள்.

''எனக்குப் புரிகிறது. மேதைகள் விசித்திரமானவர்கள்'' என்றார் மந்திரி.

ஆறரையாயிற்று. ஆறே முக்காலாயிற்று. விருந்தினர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். துருவ் இன்னும் கீழே இறங்கி வருவதாகத் தெரியவில்லை.

ஏழு மணிக்குத்தான் இறங்கி வந்தான். யாரையும் ஏறிட்டுப் பார்க்கவில்லை. வீணையை எடுத்து ஸ்ருதி சேர்த்துவிட்டு வாசிக்க ஆரம்பித்தான்.

எடுத்த எடுப்பிலேயே, கௌளி பந்து ராகத்தை ஆலாபனை செய்யத் தொடங்கினான். வந்திருந்தவர்கள் இசை ரஸிகர்கள் தாம்; ஆனால் இசையில் விசேஷ ஞானம் உடையவர்கள் இல்லை. விஸ்தாரமாக ஆலாபனை செய்ய இயலாத இந்த ராகத்தை அவன் மிக நுணுக்கமாக வாசிப்பதைக் கேட்டு ரஸிக்கக் கூடிய அறிவு அவர்களுக்குக் கிடையாது. இதைப் பற்றித் துருவ் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. நீண்ட நேரம் ஆலாபனை செய்தான். பின்னர் தீட்சிதருடைய கிருதி ஒன்றை அபாரமாக வாசித்தான்.

மஞ்சுளாவுக்குத் தன்னால் ரஸிக்க முடிந்த அளவுக்கு மற்றவர்களால் முடியுமா என்று சந்தேகம். சுற்றுமுற்றும் பார்த்தாள். மந்திரியின் கண்கள் மூடியிருந்தன. அவர் ரஸிக்கிறாரா அல்லது தூங்குகிறாரா என்று தெரியவில்லை.

பாட்டு முடிந்தது. மந்திரி கண்களைத் திறந்து கைதட்டினார். ''பிரமாதம்... யமன் கல்யாண் வாசிக்கத் தெரியுமா?'' என்று கேட்டார்.

துருவ் பதிலொன்றும் கூறாமல், வீணையை எடுத்துக் கொண்டு 'ஹாலை' விட்டு வெளியேறினான்.

''என்னவாயிற்று?'' என்றார் மந்திரி.

''ஆல் ஆஃப் யூ கெட் லாஸ்ட்'' என்றான் துருவ். அவர்களைத் திரும்பிப் பார்த்து.

(தொடரும்)



''என்ன, பில்லைப் பார்த்துப் பிரமிச்சுட்டீங்க; காயத்துக்கு ஸ்டிச்சிங் செய்திருக்கேனே...''

''ஸ்டிச்சிங் செய்தீங்க, உண்மைதான். ஆனா எம்பிராய்டரி செய்த மாதிரி சார்ஜ் பண்ணி இருக்கீங்களேன்னுதான் யோசிக்கிறேன்!''

— என். வி. ரமணி.

# சட்டத்தை ஏமாற்ற ஒரு திருமணம்

''உன் பிரச்னை தீர ஒரே ஒரு வழி தான் இருக்கிறது'' என்றாள் ஆனி.

''என்ன அது?''

''இந்நாட்டுப் பெண் ஒருத்தியை நீ திருமணம் செய்து கொள்வதுதான் அது. அப்போது உன்னை யாரும் எதுவும் செய்து விட முடியாது. காரணம், அந்தக் கல்யாணத்தின் விளைவாக நீயும் இந்த நாட்டின் குடியுரிமை பெற்றவனாகி விடுவாய்.''

பப்லோ, சிலி நாட்டிலிருந்து தப்பிக் கனடாவுக்கு வந்திருந்தவன். இவனைப் போல அரசியல் காரணங்களுக்காகச் சொந்த நாட்டிலிருந்து தப்பி அகதிகளாகக் கனடா வந்திருந்தவர்கள் பலர்.

முறையான அனுமதியின்றி, குடியுரிமை பெறுவதற்கு எந்தவிதமான வழியுமின்றி, இப்படி வந்து தங்கிவிட்ட வேற்று நாட்டவரைக் கனடா நாட்டுப் போலீஸ் அவ்வப்போது வேட்டையாடி நாடு கடத்தி வந்தது. போலீஸிடமிருந்து தப்பவும் கனடா நாட்டின் நிரந்தரக் குடியுரிமை பெறவும் என்ன வழி? அதற்குத்தான் ஆலோசனை கேட்க, வழக்கறிஞர் ஆனியிடம் வந்திருந்தான் பப்லோ.

''உங்கள் கல்யாண யோசனை கேட்க நன்றாயிருக்கிறது. ஆனால் நடக்கிற காரியமா?''

''ஏன் முடியாது?''

தன் திட்டத்தை விவரமாக அவனுக்கு எடுத்துச் சொன்னாள் ஆனி.

அலுவலகத்தை விட்டுப் புறப்பட ஆயத்தம் செய்து கொண்டிருந்தாள் இலோர்.

எல்லாமே அவளுக்கு அலுப்பாக இருந்தது. உப்புச்சப்பில்லாத தனிமை வாழ்க்கை. யாருக்காகச் சம்பாதிக்க வேண்டும்? எதற்காக வாழ வேண்டும்? எதிலும் நாட்டம் இல்லாமல், யார் மீதும் பிடிப்பு இல்லாமல். அன்பு செலுத்த ஆளில்லாமல் என்ன வேண்டிக் கிடக்கிறது? ஒரு நாளைப் போலவே மறுநாளும். வெறும் யந்திரத்தனமான வாழ்க்கை...

டெலிபோன் ஒலித்து அவள் சிந்தனைக்குத் தடை விதித்தது.

எடுத்துப் பேசிய போது மறுமுனையில் ஆனியின் குரல்.

''என் அருமைத் தங்கையே, என்ன செய்யப் போகிறாய், இப்போது?''

சுவாரசியமில்லாமல் பதில் சொன்னாள் இலோர்.

''செய்ய என்ன இருக்கிறது? வீட்டுக்குப் போய் எதையோ சமைத்துத் தின்று உறங்க வேண்டியதுதான்.''

''என்னுடன் உணவருந்த வருகிறாயா? உன்னிடம் கொஞ்சம் பேச வேண்டும்.''

''என்ன விஷயம்?''

''நேரில் சொல்கிறேன். நான் வழக்கமாகச் செல்லும் ஓட்டலுக்கு வந்துவிடு...''

சாப்பிட்டுக் கொண்டே தன் திட்டத்தை விவரித்தாள் ஆனி.

இலோர் திகைத்துப் போனாள்.

''என்னக்கா சொல்கிறாய்? ஒரு வெளிநாட்டு அகதியை நான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமா? என்ன விளையாடுகிறாயா?''

''வேறு வழியில்லை. அவனைக் காப்பாற்ற அது ஒன்றுதான் சரியான, நிச்சயமான மார்க்கம்.''

''அதற்காக?''

''உன்னைத் தவிர வேறு யாரையும் நான் கேட்டுக் கொள்ள முடியாது. கல்யாணம் என்றால் இது ஒன்றும் நிரந்தரமான அசல் கல்யாணமே இல்லை. ஏட்டளவில் ஒரு கல்யாணம். சட்டத்தை ஏமாற்ற ஒரு கல்யாணம். ஆறு மாத காலத்துக்குத்தான் இந்த உறவு. சட்டத்தின் முன்தான் இந்த உறவே தவிர, உள்ளத்தளவிலோ அல்லது உடலளவிலோ எந்தத் தொடர்பும் உறவும் இருக்காது. அதற்கு நான் உத்தரவாதம். நீங்கள் சேர்ந்து வசிக்க வேண்டும் என்பது கூட இல்லை. ஆறு மாதம் கழிந்ததும் நானே முன்நின்று விவாகரத்துப் பெற்றுத் தந்துவிடுகிறேன். தயவு செய்து எனக்காக நீ ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும்.''

முதலில் தயங்கினாலும் முடிவில் அக்காவின் வேண்டுகோளை இலோரினால் மறுக்க முடியவில்லை.

அடுத்த நாளே திருமணம் நடைபெற்றது. மாதாக் கோயிலில், பாதிரியார் முன்னிலையில் அந்தத் திருமணம் நடைபெற்ற பின்னரே போலீஸ் அங்கு வந்து சேர்ந்தது.

''இது ஒரு போலிக் கல்யாணம். அந்த உண்மையை நீதிமன்றத்தில் வெளிப்படுத்தாமல் விடமாட்டேன்'' என்று கொக்கரித்தான் போலீஸ் அதிகாரி போகார்ட்.

திரைவிழாப் படக்கதை
(கனடா)



"இப்போது என்ன செய்வது? தேவையில்லாமல் ஒரு சிக்கலில் என்னை மாட்டி வைத்து விட்டாயே!" என்று வருந்தினாள் கிளேர்.

"இன்றிலிருந்து எண்ணி ஏழாவது நாள் நீதிமன்ற விசாரணை. அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு நீங்கள் இருவரும் நம்பக் கூடிய பதில்களைச் சொல்ல வேண்டும். அப்போதுதான் தப்பிக்க முடியும். இல்லாவிட்டால் இது மோசடிக் குற்றம் ஆகிவிடும்."

ஆனியின் இந்தப் பதில் பப்லோவின் நெஞ்சில் வேதனையை உண்டு பண்ணியது.

"என்னால் இப்போது உங்கள் சகோதரியும் போலீஸ் குற்றச்சாட்டுக்கு உள்ளாகி விட்டாள்" என்றான் வருத்தம் தோய்ந்த குரலில்.

"அது ஒன்றும் பிரச்னையில்லை. நான் சில கேள்விகளைக் குறித்துத் தருகிறேன். அதற்கான பதிலைத் தெளிவாகத் தெரிந்து கொண்டு தயக்கமில்லாமல் நீதிமன்றத்தில் சொல்லி விட்டால் போதும். அப்புறம் இன்னும் ஒன்று. நீதிமன்ற விசாரணை முடியும் வரை இருவரும் ஒரே வீட்டில் கணவன் — மனைவியாக வாழ்வதைப் போலக் காண்பித்துக் கொள்ள வேண்டும்."

ஆனி இப்படிக் கூறியதும் வெகுண்டாள் கிளேர்.

"நிச்சயமாக முடியாது" என்றாள் தீர்மானமான குரலில்.

"வேறு வழியில்லை" என்றாள் ஆனி. "நீங்கள் உண்மையிலேயே ஒரே வீட்டில் வசிக்கிறீர்களா என்பதை எதிரே தெருவில் ஒரு காரில் அமர்ந்து இருபத்து நாலு மணி நேரமும் போலீஸ் கண்காணித்துக் கொண்டிருக்கும்."

"கடவுளே!" என்று பெருமூச்சு விட்டாள் கிளேர்.

அன்று இரவு அவளிடம் சுருக்கமாகத் தன் வாழ்க்கை வரலாற்றைச் சொல்லி முடித்தான் பப்லோ — நீதிமன்றத்தில் கேள்விகளுக்குப் பதில் சொல்லியாக வேண்டுமே!

தன் பங்குக்கு இளமைக்காலத்தில் அவள் வாழ்வில் நடைபெற்ற நிகழ்ச்சிகளைச் சொல்லி முடித்தாள் கிளேர்.

ஆனி எழுதிக் கொடுத்திருந்த குறிப்புகளின் படித் தங்கள் பழக்கவழக்கங்களை — ரசனைகளை பலவீனங்களை மனம் விட்டுப் பரிமாறிக் கொண்டார்கள்.

அடுத்துப் பேச வேண்டியது பற்றிய குறிப்பைப் பார்த்துவிட்டு, "ஒரு விஷயத்தில்தான் பிரச்னை" என்றாள் கிளேர்.

"என்ன?" என்று கேட்டான் பப்லோ.

"அந்தரங்கமான உறவு... அதைப் பற்றிய விவரங்கள், வர்ணனைகள், அந்த நேரத்து உணர்வுகள் போன்றவை. — நீதிமன்றத்தில் அவற்றை விவரிப்பது எப்படி?"

"கற்பனை செய்து கொள்ள வேண்டியதுதான். நாளை அதைப் பற்றிப் பேசுவோம். என்ன சொல்லலாம் என்று யோசிக்கிறேன். நீயும் யோசி" என்று சொல்லி விட்டு ஒரு தலையணையையும் போர்வையையும் எடுத்துக் கொண்டு ஹாலுக்குப் போனான். சோபாவில் படுத்துக் கொண்டான்.

படுக்கை அறைக்குள் சென்ற கிளேர் கதவைத் தாழிட்டுக் கொண்டாள்.

அடுத்த ஆறு நாட்களும் பேச்சிலேயே கழிந்தன. இருவருக்குமிடையே இருந்த இறுக்கமும் தயக்கமும் கொஞ்சம் கொஞ்சமாக விடைபெற்றுக் கொண்டன.

கலகலவெனப் பேசினார்கள். சிரித்தார்கள். ஒன்றாக வெளியே போய் வந்தார்கள். வெளிப் பார்வைக்குக் கணவன் மனைவி போலவே நடந்து கொண்டார்கள். படுக்கை மட்டும் வெவ்வேறு அறைகளில்.

கிளேர் தன்னுடைய தனிமையை மறக்கத் தொடங்கினாள். அவனுடைய செயல்களில்,

இயக்கங்களில் இடம் பெற்றிருந்த இயந்திரத் தன்மை மறைந்து ஒரு புதிய உற்சாகம் தலைதூக்கியது. என்ன காரணத்திற்காக அவர்கள் அப்படி நடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதே மறந்து விட்டதைப் போலத் தோன்றியது.

ஏழாவது நாள், நீதிமன்ற விசாரணை முடிந்து, தீர்ப்பு வெளியாயிற்று.

அவர்கள் உண்மையிலேயே கணவன் — மனைவிதான் என்று நீதிமன்றம் தீர்ப்பு வழங்கிய போது, பளிச்சென்று சூரிய ஒளி தன் வாழ்வில் புகுந்து விட்டதைப் போன்று உணர்ந்தான் பப்லோ. இனி இந்த நாட்டிலேயே வசிக்கலாம் என்ற எண்ணமே அவனைக் காற்றில் மிதக்கச் செய்தது.

வீட்டுக்குத் திரும்பித் தன் உடைமைகளை எடுத்துக் கொண்டு அவளிடம் விடை பெற்றான்.

"உனக்கு எப்படி நன்றி சொல்வது என்றே தெரியவில்லை" என்று அவளிடம் சொன்ன போது அவன் குரல் தழுதழுத்தது. "இன்னும் ஆறு மாதங்களுக்குத் தான் இந்தத் தளை. அதுவரை நான் இங்கேயே இருப்பது முறையல்ல. சரியாக அந்தக் கெடு முடிந்ததும் விவாகரத்துப் பெற்று உன்னை விடுவித்து விடுகிறேன்."

போகும் போது நான் தங்கியிருக்கப் போகும் முகவரியைச் சொல்லிவிட்டுப் போனான்.

அதன் பின் அவளுக்கு உலகமே இருண்டு போய் விட்டதைப் போல இருந்தது.

தன் வாழ்க்கையில் அவன் கொண்டு வந்திருந்த மகிழ்ச்சியை எண்ணிப் பார்த்தாள்.

அந்த ஒரு வார காலமும் தன்னுடைய வாழ்க்கையில் ஒரு நோக்கம் இடம் பெற்றிருந்ததை நினைத்துப் பார்த்தாள்.

இடையிலே வந்து இடையிலேயே போய் விட்டாலும் அவன் இல்லாதது எவ்வளவு பெரிய இடைவெளியை உண்டு பண்ணியுள்ளது என்பதை உணரத் தொடங்கினாள்.

தூசுப் படலம் போல மெள்ள மெள்ள, மிருதுவாக, எடையே தெரியாமல் அவளுடைய உண்மையான உணர்வுகள் வெளிப்பட்டு நெஞ்சத்தில் படர்ந்த போது அவள் திகைத்துப் போனாள்.

அவள் அவன் மனைவி... அந்த எண்ணமே ஒரு புது மலர்ச்சியைத் தோற்றுவிப்பதை உணர்ந்தாள். உண்மையான மன நிலை புரிந்த போது —

தடக்கென்று எழுந்தாள். அவன் கொடுத்திருந்த முகவரிக்குப் போனாள். அவன் வெளியே போயிருப்பதாகத் தெரிவிக்கப் பட்ட போது —

அவன் திரும்பி வரும்வரை காத்திருப்பதாகக் கூறி அங்கேயே உட்கார்ந்து கொண்டாள்.

— ஜி. ஆர். கே.







டாக்டர் பதில்கள்:

# ஒரு சிறுநீரகம் போதுமானதுதானா?

● கு. நெப்போலியன், மணக்கரம்பை.

● ஒரு சிறுநீரகமே போதும் என்கிறார்கள். அப்படியானால், இரண்டு சிறுநீரகங்கள் பங்கிட்டுச் செய்த பணியை, ஒரே சிறுநீரகம் செய்யும் போது அதற்குப் பணியின் பளு அதிகரிக்காதா? அதன் காரணமாக, அதன் செயல்படும் திறன் குறைந்து போகாதா?

●● டாக்டர் பி. ஆர். சுப்பிரமணியம், சென்னை — 18:

ஒரு சிறுநீரகத்தைத் தானம் செய்த, அல்லது இழந்த சில மாதங்களிலேயே மறு சிறு நீரகம் தானாகவே பெரிதாகி, ஒன்றரை சிறுநீரகத்தின் வேலைத் திறனை அடைந்து விடும். அப்போது ஒரு சிறுநீரகத்தின் உதவியுடனேயே வாழ முடியும். சாதாரணமாக, ஒன்றரைச் சிறுநீரகம் நமக்குப் போதுமானது. இதை நாம் அனுபவரீதியாகப் பார்க்க முடியும். ஒரு சிறுநீரகத்தைத் தானம் செய்தவர், இன்னொரு சிறு நீரகத்தின் உதவியோடு மட்டுமே மீதி வாழ்நாளில், ஏதும் சிரமமின்றி வாழ்ந்துவிட முடியும். ஒரு சிறுநீரகம் பழுதடைந்து போய், இன்னொரு சிறுநீரகத்தின் உதவியோடு வாழ்கிற வரும் இன்னொரு உதாரணம். இயற்கை நமக்குச் சில அவயவங்களை இரண்டிரண்டாகக் கொடுத்திருப்பது இதற்காகத்தான். எதிர்பாராது ஏற்படவிருக்கும் நஷ்டத்தை ஈடு செய்ய, கூடுதலாக, இயற்கை நமக்கு வழங்கியிருக்கும் வசதி இது.




● ஆர். ராஜேசுவரி, கிருட்டிணகிரி:

● கருவுற்றிருக்கும் பெண்களில் சிலருக்கு, காலில் வீக்கம் ஏற்படுவது எதனால்? பிரசவத்தின் போது அது தொல்லை தருமா? போக்கும் வழி என்ன?

கருவுற்றிருக்கும் பெண்களில் சிலருக்கு யூடரஸ் (கர்ப்பப்பை) விரிந்து பெரிதாகும் போது, அதன் அழுத்தம் காரணமாகவும்; சிறுநீரில் புரதம் வெளியேறுவதாலும் காலில் வீக்கம் வரும். முடிச்சுப் போன்ற ரத்த நாளங்கள் (வேரிகோஸ் வீன்ஸ்) இருந்தாலும், ரத்தச் சோகை இருந்தாலும் காலில் வீக்கம் வரும். இது பிரசவம் ஆனவுடன் மறைந்து விடலாம். ஆனால் பிரசவத்துக்கு முன்பே, டாக்டர் ஆலோசனையுடன் மேற்சொன்ன காரணங்களில் எதற்குச் சிகிச்சை எடுத்துக் கொள்ள வேண்டுமோ அதற்குத் தகுந்த சிகிச்சை எடுத்துக் கொண்டால், தொல்லை எதுவும் வராமல் தவிர்க்கலாம்.

● ஜி. நீலா, மன்னார்குடி.

● நாற்பது வயதுகளில், பெண்களுக்குக் குதிகாலில் வலி ஏற்படுவது ஏன்? எலும்பு வளர்வதுதான் காரணம் என்பது உண்மை தானா?

ஒட்டுச்சதை எனப்படும் கொல்லேஜன் டிஷ்யூவில் வரக்கூடிய வலி காரணமாகத்தான், பெண்களுக்குக் குதிகாலில் வலி உண்டாகிறது. (இந்த ஒட்டுச் சதையை கனெக்டிங் டிஷ்யூ என்று சொல்லுவதும் உண்டு.) ஸ்பாண்டிலோஸிஸ், தோள்வலி எல்லாம் இந்த ரகத்தில் சேர்ந்தவை. மேலும் குதிகால், உடம்பின் அதிக பாரத்தைத் தாங்குவதால், இவ்வலி வர வாய்ப்பு அதிகம். பெண்களுக்கு மட்டும்தான் இந்த வலி வரும் என்பதில்லை; ஆண்களுக்கும் வரலாம். கருப்பைப் பழுது, டான்சிலைடிஸ், பயோரியா போன்று உடலில் விஷக்கிருமிகள் உற்பத்தி ஆக இடமும் வாய்ப்பும் இருந்தால் இது வர வாய்ப்பு அதிகம். இவற்றை ஃபோகல் செப்ஸிஸ் என்பார்கள். எலும்பு வளர்ச்சி இல்லாமலும் வலி இருக்கலாம். எலும்பு வளர்ச்சி இருந்தும் வலி இல்லாமல் போகலாம். அதனால் எலும்பு வளர்ச்சி என்பது ஒரு காரணமல்ல. வளர்ந்த எலும்பை எடுத்துவிட்டாலும் கூட வலி தொடரலாம்.

தொகுப்பு: எஸ். வி. என்.



# சிறுசேமிப்புத் துறை

## 100% வரிச்சலுகை பெற தேசிய சேமிப்புத் திட்டங்களில் முதலீடு செய்வீர் !!

தனிநபர் இலவச விபத்து காப்புறுதியும் அளிக்கிறது
தேசிய சேமிப்புத் திட்டங்கள்




தேசிய சேமிப்புத் திட்டங்கள் — வருமான வரிச்சலுகை, சேமிப்பிற்கு மத்திய அரசின் பாதுகாப்பு, சேமிப்பு வளரும் முன்பே இலவச பரிசுகள். 1% ஊக்கத்தொகை மற்றும் இலவச தனிநபர் விபத்து காப்புறுதி

- 1.1.91 முதல் 31.3.91 வரை தமிழ்நாட்டில் குறிப்பிட்ட சில திட்டங்களில் ரூ. 1000/-ம் அதற்குமேலும் முதலீடு செய்யும் முதலீட்டிற்கு தனிநபர் விபத்து இன்ஷ்யூரன்ஸ் வசதி. பிரீமியத்தை தமிழக அரசே செலுத்துகிறது.



நிர்வகிப்போர்
யுனைடெட் இந்தியா
இன்ஷ்யூரன்ஸ்
நிறுவனம், சென்னை

## தமிழக அரசின் சிறப்பு சலுகைகள்:

- ஒவ்வொரு ரூ.500/- முதலீட்டிற்கும் ஒரு இலவச பரிசு கூப்பன் மூலம் 262 பரிசுகளில் ஒன்றைப் பெறும் வாய்ப்பு.
- தமிழ்நாட்டில் குறிப்பிட்ட சில திட்டத்தில் முதலீடு செய்யும் ஒவ்வொரு ரூ.1,000/- முதலீட்டிற்கும் 1% வரை ஊக்கத்தொகை.

கூடுதல் சலுகைகள்:

- இந்திய அரசின் முழுப்பாதுகாப்பு
- சொத்து வரிவிலக்கு
- உங்கள் குழந்தைகள் பெயரில் முதலீடு செய்து வருமான வரிவிலக்கு பெறுங்கள்.

## வருமான வரி விலக்குப் பெற தேசிய சேமிப்பில் முதலீடு செய்வீர்

| வசதிகள் | தேசிய சேமிப்பு பத்திரம் 8-வது வெளியீடு | பொதுசேம நலநிதி | தேசிய சேமிப்பு திட்டம் |
|---|---|---|---|
| வட்டி | 12% | 12% | 11% |
| முதலீட்டுக்கு வருமான வரிவிலக்கு | ரூ.50,000 (88 பிரிவின்கீழ் | ரூ.50,000 88 பிரிவின்கீழ் | ரூ.40,000 80 CCA பிரிவின் கீழ்) |
| வட்டிக்கு வருமான வரிவிலக்கு | வருமான வரிச் சட்டம் 88 பிரிவின்கீழ் | வருமான வரியில் இருந்து வட்டிக்கு முழுவிலக்கு | வட்டி தொகை சேரும்போது வருமான வரி விலக்கு |
| செல்வ வரி | ரூ.5,00,000 வரை விலக்கு | முழுவிலக்கு | முழுவிலக்கு |
| டெபாசிட்டுகளுக்கான வரம்பு | வரம்பு கிடையாது | ரூ.60,000 | ரூ.40,000 |

## பரிசுப் பொருட்களின் விவரம்

| | | |
|---|---|---|
| 1 | சூப்பர் பம்பர் பரிசு | — மாருதி கார் |
| 1 | முதல் பரிசு | — பஜாஜ் ஸ்கூட்டர் |
| 2 | இரண்டாவது பரிசுகள் | — E.C கலர் டி.வி. |
| 3 | மூன்றாவது பரிசுகள் | — குளிர்பதனப் பெட்டி (165 லி) |
| 5 | நான்காவது பரிசுகள் | — மோஃபா |
| 10 | ஐந்தாவது பரிசுகள் | — தையல் மிஷின் |
| 10 | ஆறாவது பரிசுகள் | — சைக்கிள் |
| 30 | ஏழாவது பரிசுகள் | — கைக்கடிகாரம் |
| 200 | ஆறுதல் பரிசுகள் | — சுவர்க் கடிகாரம் |

**இலவச தனிநபர் விபத்து காப்புறுதி திட்டம் — அதிகபட்ச நஷ்ட ஈடு ரூ. 50,000/-**

தனிநபர் விபத்து இன்ஷூரன்ஸ் பாலிசி கிடைக்குமிடம்:
அனைத்து மாவட்ட ஆட்சியாளர் அலுவலகம் மற்றும்
இயக்குநர்
**சிறுசேமிப்புத்துறை**
143, அண்ணாசாலை, சென்னை-600 002.
தொலைபேசி: 840223/846209.

DIPR/407/MS/SQUARES

# சிகரங்களை நோக்கி

**19**

தரையில் சிதறிய தங்கத்துண்டுகள் ஆடிமுடிந்து அதிர்வுகள் அடங்கின.

அந்த இடத்தை ஒரு சுடுகாட்டு மௌனம் சுற்றி வளைத்தது.

விஞ்ஞானியை ஒரு விலங்காகவும், விரவிக் கிடக்கும் தங்கக் கட்டிகளை அந்த விலங்கின் எச்சங்களாகவும் மாறி மாறிப் பார்த்த ஓவியா திருஞானம் மீது நிறுத்தினாள் தன் தீட்சண்யக் கண்களை.

அதுவரைக்கும் உறைந்துபோன ஊமைச் சித்திரமாய்த் திகைத்து நின்ற திருஞானம் எதார்த்த நிமிடங்களில் இறங்கினான்.

தோளில் பிள்ளையோடு தரையில் குனியும் தாயாய் நிதானமாய்த் தாழ்ந்து சிதறிய தங்கக் கட்டிகளைச் சேகரிக்கத் தொடங்கினான்.

''தொடாதீர்கள் திருஞானம்!
தொடாதீர்கள்!''

பாறையில் விழுந்து தெறித்த மழைத் துளியாய் அவன் விசுக்கென்று விலகி நின்றான்.

ஏன் என்ற வினாவை அவன் கண்கள் எழுதிக் கேட்டன.

''தொடக்கூடாது திருஞானம்!
அதைத் தொடக்கூடாது.

அது பிணம் விற்பதற்கான முன் பணம்;

இந்த பூமிக்கு அவர் கட்ட நினைக்கும் கல்லறையின் முதல் தங்கச் செங்கல்;

அது மரணத்தின் முதல் தவணை.''

ஓவியா உச்சரித்தவை உதட்டு வார்த்தைகளல்ல;

உள்ளே உடைந்து உதட்டுவழி சிதறிய இதயத்தின் சில்லுகள் அவை.

வெறித்துப் பார்த்தார் விஞ்ஞானி.

அவர் கண்களில் விலங்குப் பசை மிதந்தது.

''இது மரணத்தின் முதல் தவணை இல்லை மகளே; வாழ்க்கையின் அச்சாரம்.

ரத்தங்கசியும் பாதங்களோடு உன்னைப் பாலைவனத்தில் விட்டுவிட்டுப் போய் விடுவேனோ என்று பயந்து கொண்டிருந்தேன்.

தேவையில்லை. இனி உன் வாழ்வின் எல்லை வரையில் நீ நதிக்கரை வழியாகவே நடந்துபோகலாம்.''

அதுவரை வார்த்தை பேசாதிருந்த திருஞானம் உலைகொதித்துத் தூக்கியெறிந்த சயத்தட்டாய் இருமித் திறந்தான்.

''நிஜந்தான்.

உங்கள் மகள் மட்டும் நதி வழியே நடந்து போவாள்.

ஆனால் —
நதியெல்லாம் ரத்தம்;

நுரையெல்லாம் குடல்கள்;
கரையெல்லாம் உடல்கள்.''

வியப்பினால் விஞ்ஞானி ஒருகணம் உறைந்து மறுகணம் உருகினார்.

''ஏய்! எப்படித் தெரியும் உனக்கு?

எனக்கு மட்டும்தானே தெரியும் என் ஆராய்ச்சியின் அந்தரங்கம்.

ஐம்பூதங்களும் கண்ணயர்ந்த பிறகுதானே நான் ஆராய்ச்சியே செய்கிறேன்.

என் நடுவிரல் செய்வதைச் சுண்டுவிரல் கூட அறியாதே! எப்படித் தெரியும் உனக்கு நதியெல்லாம் ரத்தம்?

அப்படியானால் உனக்கு என் மஞ்சள் மழை (yellow rain) ஆராய்ச்சி மர்மம் தெரியுமா?

ஓவியா ஓரடி முன்னே வந்தாள்.

''மஞ்சள் மழையா...?''

''ஆமாம். அதுதான் என் ஆராய்ச்சி அஸ்திரம்; இந்த மண்ணைப் புதைக்க நான் போட்ட மந்திரம்.

என் உயிரையே சிறுகச் சிறுகச் செலவழித்து அந்த மாமருந்தைக் கண்டிருக்கிறேன்.

பூமிக்குள் இறங்கிக் கொண்டு — என் இரவையும் பகலையும் புதைத்துக் கொண்டு — தூக்கத்தை இமைகளால் துண்டித்துவிட்டு என் பிப்பெட்டுகளைச் சிலுவையாக்கி அதில் என்னையே அறைந்து கொண்டு — ஒரு கருமி புதையல் காப்பது போலக் கிருமி காத்து ஒரு ஆராய்ச்சிக் கடலை நான் கடைந்தெடுத்தேன்.

**வைரமுத்து**

வந்தது அமுதமென்கிறேன் நான்;
இல்லை; விஷமென்கிறீர்கள் நீங்கள்.

உங்கள் கருத்திலும் உண்மையில்லாமல்
இல்லை.

ஒன்றின் அமிர்தம் இன்னொன்றின் விஷம்.

ஒன்றின் விஷம் இன்னொன்றின் அமிர்தம்.

பூக்களின் தேன் — ஈக்களின் சமாதி.

இந்த என் ஆராய்ச்சியில் என் மூளை
என் வாழ்க்கையைத் தின்று விட்டது;
என் வாழ்க்கை என் மூளையைத் தின்று
விட்டது.

கோதுமை வளர்த்தேன்.

கோதுமையில் பூசணம் வளர்த்தேன்.

கோதுமையின் பூசணத்துக்குள் கூடுகட்டி
நுண்ணுயிர்களோடு குடியிருந்தேன்.



பிறகுதான் —

சுற்றும் பூமியைச் சற்றே நிறுத்தும் சூத்திரத்தைக் கண்டறிந்தேன்.

பூசணத்திலிருந்து புதையல் எடுத்தேன்.

பூசணத்தில் வாழும் நுண்ணுயிர் வளர்த்து 'மஞ்சள் மழைத்தூள்' தயாரித்தேன்.

சுவாச உறுப்புள்ள எந்த ஜீவனும் அதை சுவாசித்தால் போதும்—சுவாசித்த ஜீவனின் மூக்குவழி ரத்தம் வரும்; கண்வழி ரத்தம் வரும்; காதுவழி ரத்தம் வரும்.

ஒவ்வொரு மயிர்க்காலிலும் ரத்தவாசல் திறந்து கொள்ளும்.

ரத்தம் தரையில் வடிவதற்குள் உடம்பிலிருந்து உயிர் ஓடிவிடும்.

அடுத்த உலகப் போரில் ஆயுதங்களுக்கு வேலை இல்லை.

மனிதர்களின் மார்புக்குக் குறி வைக்க வேண்டியதில்லை.

மனிதன் வேர்வை குழைத்துக் கட்டிய கட்டடங்களை விழ்த்த வேண்டியதில்லை.

இந்த மஞ்சள் மழைத்தூளை வாயு மண்டலத்தில் விதைத்தால் போதும்.

திருவிழாக்களில் — ஊர்வலங்களில் — பொதுக்கூட்டங்களில்—போர்க்களங்களில் ஹெலிகாப்டர்கள் பூத்தூவுவது போல இந்தப் பொடி தூவினால் போதும்; தன் ரத்தத்தில் மனிதன் தானே மூழ்கிப் போவான்.

நான் கடுந்தவமிருந்து கண்டறிந்த அந்த உண்மையை —

போர்களை முடித்துவைக்கும் அந்தப் புனிதப் பொடியைப் பத்துக் கோடி டாலருக்கு விற்றுவிட்டேன்.

இப்போதாவது புரிந்ததா மகளே, உன் தந்தையின் தவம்?

இப்போதாவது தெரிந்ததா மகளே, நான் பூமிக்கடியில் போனது பூமியை ஜெயிப்பதற்கென்று.

சூரியன் மேற்கில் மறைவது மறுபடியும் எழுவதற்கே.

நான் புதைத்துக் கொள்ளவில்லை; என்னை நானே விதைத்துக் கொண்டேன்.

பார்த்தாயா மகளே!

என் வெள்ளிப் பதக்கம் உன்னூரில் திருடப்பட்டது.

ஆனால் வெளிநாட்டிலிருந்து எனக்குத் தங்கமகுடம் தயாராகி வந்திருக்கிறது.

என்னைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தவர்கள் இனி கைகட்டி நிற்பார்கள்.

வா மகளே!

உலகத்தின் பணக்காரர்களில் இப்போது உன் தந்தையும் ஒருவன்.

வாழ்க்கையின் சுகமான சிறகுகளால் இனி நீ பத்திரமாகப் பாதுகாக்கப்படுவாய்.

வா!

உன் தந்தையின் நரைகளுக்கு ஒரு முத்தம் கொடு.

வா!

கூனல் விழுந்த என் முதுகை உன் புன்னகையால் நிமிர்த்து.

வா!

என்னை வழிநடத்து.
என் எதிரியின் வீடுகளை நான் எச்சில் துப்பி எரிக்க வேண்டும்.

வா!

உன் காலடியில் கொட்டிக் கிடக்கும் தங்கக் கட்டிகளின் மீது நடந்துவா தங்கமே!

எங்கே... நீ வேண்டியது கேள்; விரும்பியது கேள்."

கால்புள்ளிக்கும் அரைப் புள்ளிக்கும் இடம் கொடாமல் அடர்ந்துவிழும் மழைத் துளிகளைப் போலத் தொடர்ந்து விழுந்த விஞ்ஞானியின் வார்த்தைகளைக் கேட்டு, கல்லாய் இறுகிநின்ற ஒவியா ஒரு நீண்ட இடைவேளைக்குப் பிறகு கண்ணிமைத்தாள்.

"கேள் மகளே!
நீ வேண்டியது கேள்."

"கேட்டது கொடுப்பீர்களா?"

"கேள்!"

"எனக்கு இன்னொரு பூமி வேண்டும்; இன்னொரு மனிதஜாதி வேண்டும். இதுவரை கண்ட நாகரிகம் —

இதுவரை கண்ட பண்பாடு — இன்றுவரை கண்ட விஞ்ஞானம் எல்லாம் கொண்ட இன்னொரு கிரகம் வேண்டும் எனக்கு."

விஞ்ஞானி கந்தல் கந்தலாய்ச் சிரித்தார்.

"இன்னொரு பூமியா? இன்னொரு மனித ஜாதியா? எப்படியம்மா சாத்தியம்?"

"இன்னொரு பூமியைப் படைக்க வலிமையில்லாத உங்களுக்கு இருக்கும் பூமியை உடைக்க உரிமை தந்தது யாரப்பா?"

விஞ்ஞானி மௌனத்தில் புதைந்தார்.

"மனிதகுலம் உற்பத்தியாகி உயிர்வாழ உகந்த ஒரே இடம் இந்தப் பிரபஞ்சத்தில் எனக்குத் தெரிந்து இந்த பூமி மட்டும்தான்.

இங்கும் மனிதகுலத்தை அழித்துவிட்டால் இந்தப் பிரபஞ்சமே கமன்று கொண்டிருக்கும் ஒரு சுடுகாட்டுத் தொகுதிதான்.

சொல்லுங்கள்.

இந்த பூமி ஒரு நடமாடும் கல்லறையாவது உங்களுக்குச் சம்மதமா?

நான் இந்த பூமி என்னும் விருட்சத்தில் ஒரு இலைக்காவது பசுமை கொண்டு வரப் பாடுபடுகிறேன்;



## நடக்கப் போகும் பி. டி. உஷா!

●● இதுவரை ஓடிக் கொண்டிருந்த உஷாவின் கால்கள் இனி நடக்கப் போகின்றன. நடகளப் பாதையில் அல்ல; இல்லறப் பாதையில்! கூட நடக்கப் போகிறவர், எல்லைப் பாதுகாப்புப் படையில் சர்க்கிள் இன்ஸ்பெக்டராக இருக்கும் சீனிவாசன். இருவருக்கும் ஏப்ரல் 25 — ஆம் தேதி திருமணம் நடக்கப் போகிறது.



---

நீங்களோ வேருக்கே அல்லவா விஷம் வைக்கிறீர்கள்!

நீங்கள் மனிதனிலிருந்து விஞ்ஞானியாய் விரிந்தீர்கள்; பிறகு ஏன் விஞ்ஞானியிலிருந்து விலங்காய்ச் சுருங்கி விட்டீர்கள்?''

''நிறுத்து!
உன் பேச்சுக்கு உச்சவரம்பு இல்லையா?
என்றைக்கிருந்தாலும் இந்த
மண்ணுருண்டை உடையத்தான்
போகிறது; அது உடைந்தால் என்ன...
இல்லை... உடைத்தால் என்ன?''

''இல்லை!
உடைக்கும் உரிமை உங்களுக்கில்லை.
எழுதிச் செல்லும் கை இயற்கையின் கை!
நேற்றிருந்த பூகோளம் இன்றில்லை
இயற்கை லெமூரியாவைத் தின்று
தண்ணீர் குடித்து விட்டது!

இன்னும் சில கோடி ஆண்டுகளில்
ஆப்பிரிக்கா ஐரோப்பாவுடன் இணைந்து
மத்தியதரைக் கடல் மறைந்து போகலாம்!
அழித்தல் இயற்கையின் வேலை;
ஆக்கல் மட்டுமே மனிதனின் வேலை.''

''சரி!
உன் வாதப்படியே வருகிறேன்.
எப்போதாவது இயற்கை இந்த பூமியை
எப்பம் விடத்தானே போகிறது?''

''அதற்கு நாள் இருக்கிறது.
இன்னும் இருபத்தோன்றாயிரம் கோடி
ஆண்டுகள் இந்தப் பிரபஞ்சம் விரியும்;
பிறகு நாற்பத்தோராயிரம் கோடி
ஆண்டுகள் இந்தப் பிரபஞ்சம் சுருங்கும்;
சுருங்கி வெடிக்கும்!
விஞ்ஞானிகள் கணக்கின்படி இன்னும்
எழுபதாயிரம் கோடி ஆண்டுகள் இந்த
பூமியில் உயிர்க்குலம் வசிக்க
உரிமையிருக்கிறது.
எழுபதாயிரம் கோடி ஆண்டுகளைப் பத்துக் கோடி டாலர்களுக்கு விற்று விட உங்களுக்கு என்ன உரிமையிருக்கிறது?
முதலில் உங்கள் கண்டுபிடிப்பையும் இந்தத் தங்கக் கட்டிகளையும் ஒரே குழியில் புதைத்து விடுங்கள்.
உங்கள் முகத்தில் முளைத்திருக்கும் தாடியையும் மனதில் முளைத்திருக்கும் மிருகத்தையும் ஒரே கத்தியில் சவரம் செய்து விடுங்கள்.
எங்களோடு வாருங்கள்.
வாழ்க்கை அங்கங்கே தூங்கிக் கொண்டிருக்கிறது; மெல்லிசை பாடி எழுப்புவோம்.
ஒவ்வொரு சூரியோதயத்திலும் இந்த பூமியை சந்தோஷத்தால் குளிப்பாட்டுவோம்.''

''முடியாது!
முட்டாள் மகளே முடியாது!
என்னோடு ஒத்து வந்தால் உனக்கும் ஒரு பங்குண்டு!
இல்லையென்றால் ஒழிசல் கோட்டைத்
தூக்கி எறிவது மாதிரி உன்னையும்
எறிந்து விட்டுப் போய் விடுவேன்.

அவர்கள் மீண்டும் நாளை வருவார்கள்;
என் எடைக்கு எடை பொன்னோடு வருவார்கள்!
இனி உன்னோடு இருப்பதா இல்லை
அவர்களோடு பறப்பதா என்பதை இந்த ராத்திரி விடிவதற்குள் நான் முடிவு செய்ய வேண்டும்!''

குனிந்தார்!
தங்கக் கட்டிகளைப் பொறுக்கினார்;
பரபரவென்று அடுக்கினார்;
நிலவறைக்குள் இறங்கினார்.
இறங்கும் போது கத்தினார்:
''இந்த உலகம் என்னால் அழியப் போவது திண்ணம்;
அதுவரை ஆனந்தமாய் இருப்பதே என் எண்ணம்!''

அவர் உருவம் மறைந்தபின்னும் அவர் சிரிப்பின் விஷ அலைகள் காற்றில் விரவிக் கொண்டே இருந்தன.

தூரத்தில் ஓர் ஓடை சலசலவென்று சப்தமிட்டுக் கொண்டே இருந்தது.

அது —
சலங்கை கட்டிய கால்களோடு
மரணம் அந்த மார்க்கத்தில் வருவதாகவே பட்டது.

(இன்னும் செல்வேன்)

# ராஜீவைப் பிரதமராக்க

○ எஸ். எஸ். பூங்கதிர், திருவெண்ணெய் நல்லூர்.

**? கன்னியின் சிரிப்பில் கவர்ச்சி அதிகமா, குழந்தையின் சிரிப்பிலா?**

! கன்னியின் சிரிப்பு அவரை நன்கு அறிந்தவர்களுக்குக் கவர்ச்சியாக இருக்கலாம்; பிறருக்கு அதிர்ச்சியாகக் கூட விளங்கலாம். ஆனால் குழந்தையின் சிரிப்பு அப்படியல்ல. அனைவருக்கும் கவர்ச்சிதான். எனவே, வெற்றி பெறுவது குழந்தையின் சிரிப்பே!

○ போத்தனூர் புலிச்சோழன், கோவை.

**? பெட்ரோலை மிச்சப்படுத்த விமானப் பயணத்தைத் தவிர்த்து ரயில் பயணங்களையே மேற்கொள்வாராமே, ராஜீவ்?**

! எல்லோரும் போகும் விமானத்தில் இவரும் போனால் பெட்ரோல் வீணாவதாகக் கருத இடமில்லை. ஸ்பெஷல் விமானம் என்னும் போதுதான் அதிகப்படி பெட்ரோல் செலவு. அப்படி ஸ்பெஷல் விமானத்தில் இன்று பறந்தால் அவரோ, அல்லது காங்கிரஸ் கட்சியோ அதற்குப் பணம் தர வேண்டும். நாளை பிரதமரான பின்(?) பறந்தால் அரசுச் செலவு. எனவே ராஜீவ் பதவிக்கு வந்து, பதவியில் இருக்கும் போது ஸ்பெஷல் விமானம் தமக்கு வேண்டாம் என்று ஒதுக்கினால் அப்போது பாராட்டலாம். இப்போது அல்ல.

○ எஸ். அருண், காரைக்கால்.

**? வாராவாரம் சந்திரசேகரைத் தாக்கி எழுதுவதைத் தவிர கல்கிக்கு வேறு வேலை கிடையாதா?**

! வாராவாரம் கல்கி தாக்கி எழுதும்படி நடந்து கொள்வதைத் தவிர சந்திரசேகருக்கு வேறு வேலை கிடையாதா?

○ எஸ். யோகலிங்கம், சென்னை.

**? உங்களுக்கு வீணை வாசிக்கத் தெரியுமா?**

! ஓ! தெரியுமே! ஆனால் பிறர் கேட்கும்படி வாசிக்கத் தெரியாது. இதனால் பிறந்த ஞானோதயம்: ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய தொழில் தவிர இன்னொரு கலை பயில வேண்டும். சோர்வு நீங்க, மனம் டென்ஷன் குறைந்து சமன்பட அது கை கொடுக்கும்.

○ கே. ஆர். தேவேந்திரன், கொணவட்டம்.

**? அண்டப் புளுகுக்கும் ஆகாசப் புளுகுக்கும் என்ன வித்தியாசம்?**

! விடுதலைப் புலிகள் விஷயத்தில், முதல்வராயிருந்த போது தாம் அவ்வப்போது போதிய அளவு நடவடிக்கைகள் எடுத்து வந்திருப்பதாகக் கலைஞர் கூறுவது அண்டப் புளுகு; கலைஞர் ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை, ஜனாதிபதி ஆட்சி வந்த பிறகுதான் விடுதலைப் புலிகள் பிடிபட்டிருக்கிறார்கள் என்பதாகச் சகாயும் சகோதரர்களும் பேசுவது ஆகாசப் புளுகு!

○ சி. கார்த்திகேயன், நெய்விளக்கு.

**? பெரும்பாலான பந்த்கள் வெற்றியடையக் காரணம் என்ன?**

! பொதுச் சொத்துக்களுக்குச் சேதம் விளைவதைத் தவிர்க்க அரசே போக்குவரத்தை ஸ்தம்பிக்கச் செய்துவிட, கடைக்காரர்கள் வன்முறைக்கு அஞ்சி 'நமக்கேன் வம்பு' என்று கடை திறக்காமல் இருந்துவிட, பந்த் வெற்றி. ஆனால் ஒன்று. தி. மு. க. அரசு டிஸ்மிஸ் ஆனதையொட்டி நடந்த கதவடைப்பு, வன்முறையை எதிர்பார்க்க முடியாத பிற மாநிலங்கள் சிலவற்றிலும் வெற்றி அடைந்திருப்பதைக் கவனிக்க வேண்டும்.

○ மரகதம் மணாளன், ஈரோடு.

**? 'தமிழ்நாட்டில் இருந்து கொண்டு மத்திய அரசை நடத்திய காலம் போய் விட்டது' என்று சந்திரசேகர் சொன்னது பொய்யாகி விட்டதே?**

! தமக்கு உத்தரவு போயஸ் தோட்டத்திலிருந்து வரவில்லை; ஹைதராபாத் முகாமிலிருந்துதான் வந்தது என்று சந்திரசேகர் கூறக் கூடும்!

○ டி. வி. என். சுஜமுகன், திருவெண்ணெய் நல்லூர்.

**? முன்பு தி. மு. க. அரசை இந்திரா காந்தி கலைத்ததற்கும் இப்போது சந்திரசேகர் கலைத்ததற்கும் உள்ள வித்தியாசம் என்ன?**

! குறைந்தபட்சம் ஆறு சொல்லவா? 1. அப்போது இந்திரா காந்திக்கு மெஜாரிட்டி. இப்போது சந்திரசேகருக்கு மைனாரிட்டி; 2. அப்போது எமெர்ஜென்ஸி; இப்போது இல்லை; 3. அன்று சட்ட சபை ஆயுள் முடியும் தருணம்; இன்று இரு ஆண்டுகளே

* பிரதமராக முயற்சி?





* ஆகாசப் புளுகு

# முயற்சி நடக்கிறதாமே?

முடிவடைந்துள்ளன; 4. இந்திரா தன் பதவியைக் காப்பாற்றிக் கொள்ள எடுத்த முடிவு அல்ல; சந்திரசேகர் தாற்காலிகமாகவேனும் பதவியைக் காத்துக் கொள்ள இதைச் செய்திருக்கிறார்; 5. 'கலைக்க மாட்டேன்' என்று இந்திரா புளுகவில்லை; இன்று அப்படி அல்ல, உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசப்பட்டது; 6. அன்று ஆளுனர் கையெழுத்துப் போட்டார். இன்று ஆளுனரின் எதிர்ப்பை மீறி இந்தக் காரியம் நடந்திருக்கிறது.

**○ பி. சரவணன், சேலம்.**

**? மூப்பனார் தேர்தலில் போட்டியிடப் போவதில்லை என்று கூறியுள்ளாரே?**

! அன்று பல்முனைப் போட்டியில் கஷ்டப்பட்டு ஜெயிக்க வேண்டிய நிலை; நின்றார். இன்று இருமுனைப் போட்டியில் எளிதாக ஜெயிக்கக் கூடிய நிலை; 'நிற்கப் போவதில்லை' என்கிறார். இதிலிருந்தே புரிந்து

* பொய்யாய்ப் போனது...





* தேர்தலில் நிற்க மாட்டார்

கொள்ள வேண்டாமா, தன்மானத்தை இழந்து காங்கிரஸ் பெறும் வெற்றி அவருக்குப் பிடிக்கவில்லை என்று.

**○ த. ரவீந்திரன், புதுவண்டிப்பாளையம்.**

**? தமிழகத்தில் புதிய ஆளுநரை நியமிக்கும்படி மத்திய அரசை ஜெயலலிதா கேட்டுக் கொண்டிருக்கிறாரே?**

! அவருடைய வேண்டுகோளை உத்தரவாகக் கருதிச் சந்திரசேகர் உடனே செயல்பட்டிருப்பார். ஆனால் பர்னாலா ஒருசிக்கியராக விளங்குவதுதான் அவருக்கு இடைஞ்சலாகப் போய்விட்டது. டிஸ்மிஸ் என்றால் பஞ்சாப் மக்களின் மனோநிலையைக் கவனிக்க வேண்டும். அவராகவே ராஜினாமா செய்து விட்டால் வசதி. ஆனால் தவறு என்று உணர்ந்தால் செருப்புத் துடைக்கும் தண்டனைக்கும் தயாராகும் பர்னாலா. அநீதியை எதிர்த்து நிமிர்ந்து நிற்கிறார். ராஜினாமா செய்து பிரதமருக்கு உதவிட அவர் தயாரில்லை. இதனால், இரண்டுமில்லாமல் வேறு மாநிலத்துக்கு அவரை மாற்றிவிட யோசனை நடந்தது. இதை எதிர்த்து

* நிமிர்ந்து நிற்கிறார்





* அன்று கலைத்தார்

ராஜினாமா செய்ததில் மறுபடி வெற்றி பர்னாலாவுக்கே!

**○ ஸ்வீட் ரவி, கும்பகோணம்.**

**? 'சதாம் உசேன்?' என்ற கேள்விக்கான பதிலில், ஈராக்குடன் நடத்திய யுத்தத்தில் அவர் ரசாயன ஆயுதங்களைப் பயன்படுத்தியதாக எழுதியிருக்கிறீரே, ஈரான் என்றல்லவா இருக்க வேண்டும்? போர் பயம் உம்மையும் தொற்றி விட்டதா?**

! பயம் இல்லை; கல்கி வாசகர்கள் புத்திசாலிகள், தவறு நேர்ந்தாலும் திருத்தி வாசித்துக் கொள்வார்கள் என்பதால் கொஞ்சம் அலட்சியம். ஸாரி.

**○ தஞ்சைத் தரணியன், முத்துப் பேட்டை.***

? ரா?

! உளவறியும் நிறுவனங்கள் எப்போதும் பச்சைதான். (Raw) ஆட்சிக்கு வருகிறவர்கள் தங்கள் இஷ்டம் போல் அதைச் சமைத்துக் கொள்வார்கள்.

**○ இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.**

? ராஜீவைப் பிரதமராக்க முயற்சி நடக்கிறதாமே?

! தேவிலால் இந்த யோசனையை வெளியிட, 'ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றிய பிறகு தேர்தல் நடத்தினால் அரசு இயந்திரத்தைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம்' என்று ராஜீவும் திட்டமிட்டிருப்பார். சந்திரசேகரைத் துணைப் பிரதமராக்கி இதைச் சாதிக்கலாம் என்பதாக ஒரு பேச்சு அடிபட்டதேயொழிய முயற்சி கைகூடும் என்று தோன்றவில்லை. எதிர்க்கட்சிகள் உஷாராய் இருக்கின்றன.

*** ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**தஞ்சைத் தரணியன்,**
**முத்துப்பேட்டை.**
**— 614 704.**

# பிறந்த வீட்டுச் செல்லம்


















கணவனுடனும் போகாமல், மாமியார் மாமனாருடனும் தங்காமல், பெற்றோருடனும் இருக்காமல் ராணி குழந்தைகளுடன் 'தனி'க்குடித்தனம் போனாள்! தன் பெற்றோர் தனியாக இருப்பார்களே என்று வேணு சில காலம் சென்று உள்ளூருக்கே வேறு வேலை மாற்றிக் கொண்டு வந்துவிட்டான். ஆனால் ராணியுடன் போய் இருக்கவில்லை. அவளைத் திரும்பி வரச் சொல்லிக் கூப்பிடவும் இல்லை. மாறாக அவள் குடித்தனத்துக்கு மாதா மாதம் பணம் அனுப்பி, தனியாக இருக்கும் அவளுக்கு அவசர உதவிக்குச் சௌகரியமாய் டெலிபோன் இணைப்பு வாங்கிக் கொடுத்து, காஸ் கனெக்ஷன் வாங்கிக் கொடுத்து, எல்லா உதவிகளும் செய்தான்! ஆனால் அவளைத் திரும்ப அழைக்கவில்லை!

கணவனின் உதவிகளை ஏற்ற ராணி அவனைத் தன்னுடன் வந்து இருக்கும்படி அழைக்கவேயில்லை. மாறாக, அவன் அபூர்வமாய் வந்து குழந்தைகளுடன் ஒரு மணி நேரம் விளையாடிவிட்டுப் போவதையும் ஆட்சேபித்தாள். "அக்கம் பக்கத்தில் நீங்கள் வெளியூரில் இருப்பதாகச் சொல்லி வைத்திருக்கிறேன். ஒரு மணி நேரத்துக்கு வந்துவிட்டுப் போனால் அவர்கள் என்ன நினைப்பார்கள். வந்தால் இரண்டு நாட்கள் தங்கும்படி வரவேண்டும்..." என்றாள். வேணுவோ, வயதான பெற்றோரை விட்டு வர மறுத்தான்.

இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளாமலே காலம் கழித்தனர். ராணி ஏராளமாய் 'டொனேஷன்' கொடுத்து (வேணுவின் பணத்திலிருந்துதான்!) குழந்தைகள் இருவரையும் தன் வீட்டருகே இருந்த பிரபல பள்ளியில் சேர்த்தாள்.

ராணி பற்றிய விஷயம் அறிந்த அவள் தாய் மாமா, **Legal Aid Board** ஐச் சேர்ந்த சில மணநல ஆலோசகர்களிடம் சென்று உதவி கேட்டார். அவர்களும் ராணியைப் பார்த்துப் பேசினார்கள். **Legal Aid Board** ஐச் சேர்ந்த திருமதி விமலா, இத்தம்பதியைச் சேர்த்து வைத்த அனுபவத்தை விவரித்தார்:

"ராணியிடம் சென்று 'இப்படிப் பிரிந்து வாழ்வதில் என்ன லாபம்? நீ கணவனுடன் சேர்ந்து கொள்' என்று சொல்லிப் பார்த்தோம்... ஆனால் அவள் பிடிவாதமாக மறுத்தாள். குழந்தைகள் இங்குள்ள பள்ளியில் படிக்கிறார்கள். நகரின் வேறு பகுதியில் உள்ள மாமியார் — மாமனார் வீட்டிலிருந்து இவ்வளவு தூரம் அவர்கள் வந்து போக முடியாது என்றாள்.

"வேணுவிடம் பேசிய போது 'வயதான பெற்றோரை விட்டுவிட்டு நான் எப்படிப் பெண்டாட்டியின் பின்னால் போக முடியும்...?' என்று வாதாடினான்.

"தம்பதி இருவருக்குமே மீண்டும் இணைய வேண்டும் என்ற விருப்பம் உள்ளது என்பது மட்டும் அவர்கள் சொன்னவற்றிலிருந்து புரிந்தது. ஆனால் மேலுக்கு வறட்டுப் பிடிவாதம்! எனவே வேணுவின் பெற்றோரைத் தனியே அழைத்துப் பேசினோம். 'உங்கள் மகனின் சந்தோஷம் உங்களுக்கு முக்கியமில்லையா? நீங்கள் அவர்களை இணையச் செய்ய உதவ வேண்டும்... உங்களைத் தனியே விட்டுவிட்டு மனைவியுடன் இருக்க உங்கள் மகன் மறுக்கிறார், அதனால் நீங்களே அவருக்கு மனைவியுடன் போய் இருக்குமாறு அறிவுரை கூறுங்கள்' என்றோம்.

"வேணுவின் பெற்றோரும் சம்மதித்தனர். ஆனால் அவர்கள் பேசிய விதம் வேணுவின் குற்ற உணர்வையே தூண்டியது: 'எங்களுக்கு என்னப்பா, நாங்கள் பாட்டுக்கு ஏதோ இருந்துக்குவோம்... நீங்கதான் வாழ வேண்டியவங்க, சேர்ந்து சந்தோஷமா இருங்க...' என்றனர்.

"மீண்டும் மீண்டும் பேசி, வேணுவின் பெற்றோருடைய அணுகுமுறையை மாற்றியதோடு, வேணுவையும் மனைவியுடன் சென்று இருப்பதற்குச் சம்மதிக்கச் செய்தோம்.

"வேணு, ராணி இருவருக்குமே சில நிபந்தனைகள் விதித்தோம்.

- வார நாட்களில் வேணு, ராணி, குழந்தைகள் சேர்ந்திருக்க வேண்டும்.
- வாரக் கடைசி, விடுமுறை நாட்களில் இருவரும் அவரவர் பெற்றோருடன் இருக்கலாம்.
- குழந்தைகள், வாரக் கடைசி நாட்களில் இரு தாத்தா — பாட்டி வீடுகளிலும் மாறி மாறி இருக்க வேண்டும்.

"இந்த நிபந்தனைகளைக் கடைப்பிடித்து இத்தம்பதி இப்போது சந்தோஷமாக இருக்கிறார்கள். நாங்கள் அவர்களுக்கு வகுத்துத் தந்ததை அவர்கள் தாங்களே வெகு சுலபமாக வகுத்துக் கொண்டிருக்க முடியும். ஆனால் பிடிவாதம், சின்ன விஷயத்தைக் கௌரவப் பிரச்னை ஆக்குதல் என்று வம்பை வளர்த்துக் கொண்டே போய் இறங்கி வர இருவருமே மறுத்து வந்தனர்.

"இந்தப் பிரச்னை எழுவதற்கு அடிப்படைக் காரணம் மனைவியின் பெற்றோரைக் கணவனும் அவன் வீட்டினரும் முழுமையாக ஏற்று அங்கீகரிக்க மறுப்பதுதான். இது இந்தியச் சமூகத்தில் வெகு சகஜமான நிலை.

"ஐம்பது வருடங்களுக்கு முன்னால் பெண்கள் புக்ககத்தில் தங்களை ஐக்கியப் படுத்திக் கொண்டு பிறந்தகத்தைப் பிரசவ காலத்தில் மட்டுமே அணுகியது போல் இப்போதும் இருக்க வேண்டும் என்று கணவன்மார்கள் எதிர்பார்த்தால் எப்படி? இன்றைய பெண்கள் படிப்பாளிகள். 'என் கணவரின் பெற்றோரை நான் ஏற்பது போல் எனது பெற்றோரை அவர் ஏற்க வேண்டும்' என்ற நியாயமான வாதத்தை முன் வைப்பவர்கள். மாப்பிள்ளைகள் போலி கௌரவம் பாராமல் சகஜமாக நடந்து கொள்வதே புத்திசாலித்தனம். அதுதான் தர்மமும் கூட...."

தொகுப்பு: எஸ். ஆர்.



ஆளுனரின் ஆலோசகர்!

# சவால்கள் இவருக்குச் சர்க்கரை!

கோட்டையில், முதல் மாடியில், அன்பழகன் அமர்ந்திருந்த அறையில்தான், தற்சமயம் கவர்னரின் ஆலோசகர் விஸ்வநாதன் ராமச்சந்திரன் அமர்ந்திருக்கிறார். ஆலோசகரைப் பார்க்கக் கூட்டம் அலைமோதுகிறது. எல்லோர் கையிலும் மனுக்கள். ஒவ்வொருவரையும் தனித் தனியாக அழைத்து மனுக்களை வாங்கிக் கொண்டு விசாரிக்கிறார்.

''என்னால உடனடியாக வேலை போட்டுக் கொடுக்க முடியாதுப்பா... மனுவைப் பரிசீலிக்கிறேன். சட்டப்படி ஏதாவது உதவி செய்ய முடிஞ்சா கண்டிப்பாச் செய்யறேன்'' என்று கால் ஊனமடைந்த ஒருவரிடம் மனுவைப் பெற்றுக் கொண்டு ஆறுதலாகக் கூறி அனுப்பி வைக்கிறார்.

''ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்கான மனுக்கள் வருகின்றன. எல்லாவற்றையும் படித்து முடிக்கவே, ஒரு நாளின் பெரும் பகுதி செலவாகி விடுகிறது! இதைத் தவிர கோப்புகள் வேறு. என்னோட பழக்கம், அலுவலகத்திலேயே அன்றைய வேலைகளை முடிப்பதுதான்'' என்கிறார்.

அறுபது வயதாகும் ராமச்சந்திரன் பழுத்த, கொட்டை போட்ட ஐ. ஏ. எஸ். அதிகாரி.

சென்னை மற்றும் ஹார்வார்டு பல்கலைக் கழகத்தில் படித்தவர். திறமைக்குச் சவால் விடும் வேலைகளை ஏற்றுச் செய்வதில் மகிழ்ச்சி அடைபவர். கேரள அரசின் தலைமைச் செயலாளராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். ராமச்சந்திரன் ஓய்வு பெற்ற பிறகும் கேரள அரசு அவரை விசேஷ ஆலோசகராக நியமித்தது. கேரளத்தின் தொழில் வளர்ச்சியில் இவரது பங்கு குறிப்பிடத்தக்கது. இந்திரா காந்தியிடம் பல வருடங்கள் இணைச் செயலாளராக இருந்தவர்.

கேரளாவில் அதிகாரங்களைப் பஞ்சாயத்து அளவில் பரவலாக்கும் விதத்தில், இவர் எழுதிக் கொடுத்திருக்கும் ஆலோசனைகள் தற்போது பரிசிலனையில் இருக்கின்றன. இடுக்கி அணை வேலைகள் ஒரு கட்டத்தில் நடாலென்று நின்ற போது, பிரச்னைகளைத்தீர்த்து வைத்து திட்டத்தைத் தொடர்ந்து செயல்படுத்தி முடித்தவர். 1970 களில் பெட்ரோலியப் பொருட்களுக்குத் தட்டுப்பாடு வந்த போது, பிரதமருக்குத் தக்க ஆலோசனைகளைக் கூறி நாட்டை இக்கட்டிலிருந்து காப்பாற்ற உதவியவர். கேரள கோவில்களை நிர்வகிக்கும் தேவஸ்தானம் போர்டில் சிக்கல்கள் ஏற்பட்ட போது அவற்றைக் களைய அரசினால் நியமிக்கப்பட்டவர்.

இப்படி சவால்களைச் சாதனைகளாக மாற்றும் ஆலோசகருக்கு ஒரு மகன், மகள். இருவரும் அமெரிக்காவில் இருக்கிறார்கள்.

மனைவி பத்மா ராமச்சந்திரனும் ஒரு ஐ. ஏ. எஸ். அதிகாரி. இப்போது கேரள அரசின் தலைமைச் செயலர்!

கணவன், மனைவி இருவருமே ஒரு மாநிலத்தின் தலைமைச் செயலர்களாகப் பணியாற்றியிருப்பது ஓர் ஆச்சர்யம்தானே!

—தில்லப்பா

முதலாளி: உன்னை வேலைக்குச் சேர்த்துக்கிறேன். ஸ்டார்ட்டிங் சாலரி 300 ரூபாய், சரிதானே?

டிரைவர்: அது சரிதாங்க...! டிரைவிங் சாலரி எவ்வளவு?

— பி. பன்னீர்செல்வன்.





# பயணத்துக்குச் சாலையா? மரணத்துக்குச் சாலையா?

சாலை விபத்துக்களைத் தவிர்ப்ப தற்கான உலக மாநாடு, சென்ற மாதக் கடைசியில் தில்லியில் நடந் தது. அப்போது தில்லி, பம்பாய்க்கு அடுத்தபடியாகச் சென்னையில்தான் சாலை விபத்துக்கள் அதிகம் என்ப தாகக் குறிப்பிடப்பட்டது.

சாலை விபத்துக்களில் பெரும் பாலான மரணங்கள் சைக்கிள் அல்லது இரண்டு சக்கர மோட்டார் வாகனங்கள் ஓட்டுபவருக்குத்தான் ஏற்படுகின்றன.

சீனாவில் சைக்கிள்களுக்குத் தனியாகச் சாலையில் இடம் ஒதுக்கப்படுகிறது. விரைவு வாகனங்களை இந்தப் பகுதியில் செல்ல அனுமதிப்பதில்லை.

சாலைகளில் ஒருவரை ஒருவர் வாகனங் களில் முந்தும் போது பல விபத்துக்கள் நேர் கின்றன. முந்த வேண்டிய அவசியமே இல்லை; இப்படி முந்திக் கொண்டு விரை வதால் அதிகபட்சம் மூன்று அல்லது நாலு நிமிடங்கள் முன்னதாக நீங்கள் போய்ச் சேர வேண்டிய இடத்தை அடையலாம். இதற்குப் போய் ஆபத்தை விலைக்கு வாங்கு வது போல் நடந்து கொள்ள வேண்டுமா? முந்த வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டால், விதிப்படி முந்த வேண்டும். அதாவது வலது பக்கமாகத்தான் — ஒலி எழுப்பிய பின் தான் முந்திச் செல்ல வேண்டும். அப்போதுதான் முன் செல்லுபவர் தமக்கு முன் உள்ள இடைஞ்சல்களை நிர்ணயித்து, முந்த அனுமதிக்க இயலும்.

அரசுப் போக்குவரத்து வாகனங்கள் காரணமாகத்தான் 'அதிக அளவு சாலை விபத்துக்கள் நிகழுவதாகவும் ஒரு தகவல் சொல்லுகிறது. அவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எதுவும் எடுக்க இயலாத நிலை இருப்பதாலும் குற்றங்கள் அதிகரித்துக் கொண்டே போகின்றன. சட்ட நிபுணர் ஸ்ரீராம் பஞ்சு, கன்ஸ்யூமர் ஆக்ஷன் குரூப் சார்பில் ஒரு கருத்தைச் சொன்னார்: 'ஒரு போலீஸ் உயர் அதிகாரி பல்லவன் போக்கு வரத்துக் கழகத் தலைவராக நியமிக்கப்பட்ட பின், காவல் துறைக்கும் பி.டி.சி.க்கும் இடையே ஓர் உடன்பாடு இருக்கிறது. அதி வேக ஓட்டுதல் காரணமாகச் சம்பவிக்கும் மரணம் போன்ற பெரிய விபத்துக்கள் தவிர, பி.டி.சி. யின் சாலை அத்து மீறல்களைக் கண்டுகொள்ளக் கூடாது என்று அவர் களிடையே ஓர் ஒப்பந்தம்! அதனால்தான் கண்மூடித்தனமாக அவர்கள் படு பயங்கர வேகத்தில், விதிகளை மீறி, வண்டி ஓட்டு

கிறார்கள். இது பல சமயங்களில், விபத்துக்களை உருவாக்கி விடுகிறது. ஒரு கருத்தரங்கில் பேசும் போது இதற்காக ஓர் அரசு உத்தரவே இருப்பதாக, போலீஸ் கமிஷனர் ராஜசேகரன் நாயரும், நீதிபதி மோகனும் குறிப்பிட்டனர்.''

வழக்கறிஞர் ஸ்ரீராம் பஞ்சு, இதை எதிர்த்து ஒரு ரிட் மனு தாக்கலாகியிருப்பதாகவும், நீதிபதி பக்தவத்சலம் அந்த ஜி.ஓ. வின் பிரதியை கன்ஸ்யூமர் ஆக்ஷன் குரூப்புக்குக் கொடுக்க வேண்டும் என்று ஆணையிட்டிருப்பதாகவும் கூறுகிறார்.

**சா**லை விபத்துக்கள் நிகழக் காரணம் என்ன என்று சற்று ஆராய்ந்து பார்த்தால், முக்கியமானவையாகச் சில விஷயங்கள் தெரிய வரும்:

- குறுகலான அல்லது அதிக வளைவுகள் கொண்ட சாலைகள். போக்குவரத்து நெரிசல்.

- சாலைகளில் உள்ள பள்ளங்களும் மேடுகளும், திடீரென்று முன் செல்லும் வாகனம் நிறுத்தப்படக் காரணமாவதால், பின்னால் வரும் வாகனம் அதன் மேல் மோத நேரிடுகிறது.

- சாலைகளின் ஓரங்களை ஆக்கிரமித்து அதன் அகலத்தைக் குறைக்கும் கடைகள், குப்பைக் கூளங்கள்.

- சட்டத்துக்குப் புறம்பாக அரசியல் கட்சிகள் அமைக்கும் வளைவுகள் கட்டத் தோண்டப் பாதிச் சாலைகளை அடைத்துக் கொள்ளுதல்.

**சா**லை விதிகளை ஓட்டுநர்கள் அனுசரிக்கப் போலீசார் கண்காணிப்புத் தேவை. வாகனம் ஓட்டுவதில் மட்டுமின்றி, சாலை விதிகளிலும் நல்ல பயிற்சி ஏற்பட்ட பிறகே, லைசென்ஸ் வழங்க வேண்டும். காவல் துறையினர் சாலைகளில் வளைய வந்து, தவறு செய்பவர்களை அங்கேயே அப்போதே தண்டிக்க வேண்டும். அபராதத் தொகை எனில் வீசி விட்டு வந்து விடுகிறார்கள். அவர்கள் சரீரத்துக்குச் சிறிது சிரமம் கொடுத்தால், திருந்தி விட வாய்ப்பு அதிகம். காரில் ஓரிரு சக்கரங்களில் காற்றை வெளியேற்றி, 'பம்ப்'பைக் கையில் கொடுத்துக் காற்றடித்துக் கொள்ளச் சொல்லலாம்!

இப்படிப்பட்ட கடுமையான போக்கைக் கையாளுமுன், சாலை விதிகளைப் பற்றிப் பெரிய அளவில் பிரசாரம் செய்ய வேண்டும். இப்படிச் செய்தால் வெளிநாடுகளில் உள்ள சாலைப் போக்குவரத்துக்களைப் போல நாமும் கொண்டு வர முடியும்! விபத்துக்களையும் குறைக்க முடியும்.

— டாக்டர் பி. ஆர். சுப்பிரமணியம்

# "உங்களுக்குப் பாராட்டு; என் பர்சுக்குத்தான் வேட்டு!"

● 'மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் ஆட்சியை கலைக்க நூறு முறை யோசிப்பேன்' என்று கூறிய சந்திரசேகர், தம்முடைய அரசுக்குப் பத்து எம்.பி.க்களின் ஆதரவு மிகவும் முக்கியம் என்பதற்காகத் தி. மு. க. ஆட்சியைக் கலைத்தது அவருடைய பதவி ஆசையைத்தான் அம்பலமாக்கியது.

பி. பி. குளம். ம. செந்தில் நாதன்.

● புலிகளை வளர விட்டால் என்ன? பிந்தரன்வாலே மாதிரி பிரபாகரன் வளர்ந்தால் என்ன? தமிழகம் பஞ்சாப் ஆனால் என்ன? சபாநாயகர் நேர்மை — நீதி தவறி ஆளும் கட்சி சொல்படி செயல்பட்டால் என்ன? கட்சி மாறல் தடைச் சட்டத்தின் இடுக்குகளில் ஒளிந்து அநியாயம் செய்தால் என்ன? சட்டமன்றத்தில் ஜெயலலிதாவைப் பாஞ்சாலி ஆக்கினால் என்ன? துரைமுருகனை ஏவி கறுப்புக் கொடியாளர்களை செருப்பால் அடித்தால் என்ன? கார்ப்பரேஷன் முனிசிபல் தேர்தல்களைத் தள்ளித் தள்ளிப் போட்டால் என்ன? பிராமண துவேஷம் வளரக் கண்டும் காணாமல் முதல்வர் இருந்தால் என்ன? 13 வருடம் கழித்து 2004ல் மீண்டும் தி. மு. க. வர வாய்ப்பு இருந்தால் என்ன? முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட தி. மு. க. வை டிஸ்மிஸ் செய்யலாமோ? ஜனநாயகம் செத்து விடாதோ?

கம்பரசம்பேட்டை. என். பானு.

● பிரபல கர்நாடக சங்கீத மேதை அமரர் டி. கே. ஜே. விற்கு ஆசிரியர் கி. ராஜேந்திரன் சூட்டியிருந்த புகழாரம், அந்த இசை மாமேதையின் சிறப்புக்களை இன்றைய இளைய தலைமுறையினருக்குத் தெளிவாக உணர்த்தியது.

தோட்டக்குறிச்சி.
இரா. வளையாபதி.

● ஜெயலலிதாவின் எந்தச் செயலையுமே பாராட்டித் தீர்க்க வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாகியிருக்கும் இ. காங்கிரஸின் நிலையைத் தெளிவாக உணர்த்தியது கார்ட்டூன்.

கொணவட்டம். கே. ஆர். தேவேந்திரன்.

● இல்லறச் சிறப்பிதழில் பிரசுரிக்க வேண்டுமென்றே தங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தது போல் இருந்தது. திரை விழாவின் மலையாளப் படக்கதை!

திருச்சி — 8. குருகிருஷ்ணா.

● அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு என்று கூறிய காலம் போய் அடுப்பங்கரை விஷயத்தையே படிப்பாக ஏற்று ஆட்சி செலுத்துகின்றனர் பெண்கள் என்பதை அறியும் போது மகிழ்ச்சியாக இருக்கிறது.

திருச்சி — 4. பி. கண்ணன்.

● ஓர் ஆண், அதுவும் திருமணமான ஆண்; மனைவிக்குக் கணவனாய், தாய்க்குப் பிள்ளையாய் யாரிடம் தன்னை முழுவதுமாய் ஒப்படைப்பதென்ற, அவனது இருதலைக் கொள்ளி எறும்பு போன்ற நிலையை — எத்தனை அழகாகப் படம் பிடித்துக் காட்டி விட்டார், சூடாமணி!

கொரட்டூர். கே. என். ஸ்ரீனிவாசன்.

● 'சிக்கனத்துக்குச் சில யோசனைகள்' பயனுள்ள விஷயங்கள். ஆனால், யோசனைகள் கூறுவதிலும் சிக்கனமாக இருந்திருக்க வேண்டுமா என்ன! இன்னொரு பக்கம் ஒதுக்கியிருக்கலாம்.

கும்பகோணம்.
சி. சிவகாம சுந்தரி.

● 'தியானம்' சிறுகதை அல்ல! அநேகம்பேரின் அனுபவம். யார் சார் அந்த இராஜாராம்? அவருக்கு என் பாராட்டுக்களைக் கூறுங்கள்.

மதுரை — 1. எம். ஏ. கண்ணன்.

தானே சார்!
வேட்டு! உங்களுக்குச் சந்தோஷம்
ஆனால், என் 'பர்சு'க்குத்தான்
லிக்கும் யோகாவுக்கும் பாராட்டு.
சிக்கிக் கொண்டேன். சந்திரமௌ
விட்டு வாரிசுகளிடம் வகையாகச்
அதுவும் படத்துடன்! நான் என்
போட்டாலும் போட்டீர்கள் —
கலவையான மாறுபட்ட செய்தியைப்
● 'தலைகீழ் தர்பார்' போன்ற

கோவை — 26. உத்தமராஜ்.

● "சாம்பலிலிருந்து தங்கம்" என்ற தலைப்பில் 27.1.91 இதழில் வெளியான கட்டுரை தொடர்பாக ஒரு விளக்கம். கோலப் பொடி அரைத்து வியாபாரம் செய்யும் நோக்கில்தான் வங்கியில் கடன் பெற்று டிசிண்டக்ரிகேட்டர் மிஷின் வாங்கினேன். பின்னர்தான் சாம்பலை மாடு கொண்டு ரோதையில் ஆட்டி எடுப்பதைக் காட்டிலும் மிஷினில் செய்து பார்க்கலாமே என்று சோதித்து வெற்றி கண்டேன். வங்கியின் ஒத்துழைப்பு இல்லாத காரணத்தால் அல்ல. எனக்கும் நெல்லை சென்ட்ரல் பாங்குக்கும் இடையில் நல்லுறவு இருந்து வருகிறது. அவர்கள் எனக்குப் பூரண ஒத்துழைப்புக் கொடுத்து வருகிறார்கள்.

வீரவநல்லூர். ஹாஜி எப். ஏ. பீர்முகம்மது.

● வேதாரண்யம், கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலம் பற்றிய கட்டுரை ஒன்று கல்கியில் சில மாதங்களுக்குமுன் இடம் பெற்றது. கட்டுரையின் இறுதிப் பகுதியில் குருகுலத்தின் நிர்வாக அறங்காவலர் அப்பாகுட்டி, "அனாதையாய் வந்து சேர்ந்த மூன்று பெண்கள் இப்போது திருமணத்திற்குத் தயாராய் உள்ளனர். அவர்களை எண்ணித்தான்..." என்று கவலை தெரிவித்திருந்தார்.

அந்த மூன்று பெண்களுக்கும் குருகுலத்தில் 8.2.91 இல் திருமணம் நடைபெற்றது. அந்த மூன்று பெண்களுக்கும் வரன் அமையக் காரணமே நமது கல்கி இதழ்தான். கல்கியில் கட்டுரையைப் படித்த முற்போக்கு எண்ணம் கொண்ட இளைஞர்கள் பலர், தொடர்பு கொண்டனர். மூவரைத் தேர்ந்தெடுத்துத் திருமணங்கள் சிறப்பாக ஒரே சமயத்தில் நடந்தன.

கருப்பம்புலம். கப்பு வேதையா சித்திரவேலு.



# ஜனசக்தி

சினிமா நட்சத்திரங்கள், முதல்வர்கள் ஆகும் போது, பத்திரிகை ஆசிரியர் முதல்வராகக் கூடாதா என்ன!

ஒரு பத்திரிகை ஆசிரியரின் மனைவியைப் பற்றிய கதை. அதிகாரத்தில் உள்ளவர்கள் செய்யும் அட்டூழியங்களை வெளிப்படுத்தி அவர்களை மக்கள் மத்தியில் அடையாளம் காட்டுவதையே லட்சியமாகக் கொண்டுள்ள அந்த ஆசிரியர் அவர்களால் கொலை செய்யப்பட, மனைவி ஆசிரியர் பொறுப்பேற்றுக் கணவரின் லட்சியத்தைப் பூர்த்தி செய்து, முதல்வர் பதவியிலும் அமர்ந்து விடுகிறாள்!

பணத்திமிர், அரசியல் ஆணவம், அதிகார துஷ்பிரயோகம் ஆகியவற்றைச் சாடுவதை நோக்கமாகக் கொண்ட கதை. நோக்கத்தைப் பளீரென்று வெளிப்படுத்தும் வசனங்கள். தெலுங்கு மூலம் எப்படியோ, தமிழில் வலுவாக அந்த உணர்வுகளை மொழி மாற்றம் செய்து வெளிப்படுத்தியுள்ள கவிஞர் வைரமுத்துவுக்கு இது இன்னுமொரு வெற்றி.

சும்மா கிடைத்து விடவில்லை 'ஊர்வசி' விருது என்பதை மீண்டும் வலியுறுத்தும் சாரதா. துணைக்குப் பானுசந்தர், நாகேந்திரபாபு, சாயிகிரண், பிரசாத். அடிதடி விவகாரங்கள் அவர்களுக்கு அல்வா. அதன் விளைவு, ஒரு கட்டத்துக்கு மேல் கதையின் அடிப்படை நோக்கம் மறைந்துபோய் ரகரகமான சண்டை உத்திகளும், ஏகப்பட்ட ரத்தம் ஆறாக ஓடுவதும் முக்கியத்துவம் பெற்றுவிட, காணுமிடமெல்லாம் ஒரே சிவப்பு.

சிலர் தாமாக நக்ஸலைட்டுகளாக மாறுவது ஒருபுறமிருக்க, சிலரைப் போலீஸ் நக்ஸலைட் என்ற முத்திரை குத்தி, சொந்த நோக்கத்துக்காக அழிப்பதும், அழிக்க முயற்சி செய்வதும் துணிச்சலாகச் சொல்லப்பட்ட விஷயங்கள்.

நிறைந்துள்ள முரட்டுத்தனமான நிகழ்ச்சிகளுக்கிடையே அந்த நாலு இளைஞர்களும் சீதாவின் மேல் காதல் கொள்வதும், அந்தக் காதல் போட்டியில் ஒருவருக்குத் தெரியாமல் மற்றவர் வெற்றிபெற முயல்வதும் தொட்டுக் கொள்ளச் சுவையான ஊறுகாய்.

'வந்தே மாதரம்' என்று தொடங்கும் பாடல் மூன்று இடங்களில், காந்திஜியின் போராட்டங்களையும், அவர் கையாண்ட அமைதி வழிகளையும் அந்தச் சொல் நினைவுக்குக் கொண்டு வந்தாலும், படத்தைப் பார்த்துவிட்டு வெளியே வரும் போது நிறையும் எண்ணம் —

காலம் மாறிப் போச்சு!

— சி. ஆர். கே.

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/-; விமானத் தபால் ரூ. 350/-.

பீடுமிக்க
ஆடவரின்
பெருமைகளில்
ஒன்று

SASI/VML/1/91





Colt's
VESTS
& BRIEFS

A Quality product from :
**VIJAYAKUMAR MILLS LTD**
Kalayamputhur Post Palani - 624 615

Distributor for Madras : **SUPREME AGENCIES** 33, P.V.Koil Street Madras - 600 004
Distributor for rest of TN : **PRIYA AGENCIES** | 36, Saravana Street Ist Floor Udumalpet - 642 126

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

# சுவை நிறைந்த கேசரி நிமிடத்தில் தயாரிக்கலாம்.

மில்க்மெய்ட் கொண்டு தயாராகும் இந்த சுவை நிறைந்த கேசரியை உங்கள் குடும்பத்தினர் வெகுவாக விரும்புவார்கள். இவற்றை எளிதாகத் தயாரிப்பதில் உங்களுக்கு ஒரே ஆனந்தம்தான்.

**கேசரி**

4–5 பேருக்கு
சமைக்க ஆகும் நேரம்: 15 நிமிடங்கள்

**தேவை**

மில்க்மெய்ட்: ½ டின், ரவா: 1 கப்
நெய்: 150 கிராம் (¾ கப்)
தண்ணீர்: 2 கப், கேசரி பவுடர்: ¼ டீஸ்பூன்
முந்திரிப் பருப்பு: 8-10 (விரும்பினால்)
திராட்சை: 20 கிராம் (½ டேபிள்ஸ்பூன்) (விரும்பினால்)

**செய்முறை**

1. வாணலியில் நெய்யை காய்ச்சவும்.
2. முந்திரிப் பருப்பையும், திராட்சையையும் பொன்னிறமாகும் வரை நெய்யில் வறுத்து தனியே எடுத்து வைக்கவும்.
3. நெய்யில் ரவாவை சேர்த்து பொன்னிறமாகும் வரை வறுக்கவும்.
4. இதோடு கேசரி பவுடர் கரைக்கப்பட்ட 2 கப் தண்ணீரை சேர்க்கவும். தொடர்ந்து கிளறி விடவும்.
5. தண்ணீர் உறிஞ்சப்பட்டவுடன் சூட்டை குறைத்து மில்க்மெய்டை சேர்க்கவும். நெய் துளிகள் வாணலியின் ஓரங்களில் படியும் வரை தொடர்ந்து கிளறிவிடவும்.
6. நெய் தடவிய தட்டில் ஊற்றவும். விரும்பினால் முந்திரிப் பருப்பையும் திராட்சையையும் தூவவும்.
7. சதுர வில்லைகளாகப் போடவும்.
8. சூடாகவோ, குளிர வைத்தோ பரிமாறவும்.

## விருந்தை பல செய்திட மில்க்மெய்ட்

**இலவசம்**
மில்க்மெய்ட் ரெஸிப்பி புத்தகம்
அதனைப் பெற போஸ்ட் பேக் 22,
புது தில்லி-110019
என்னும் முகவரிக்கு அனுப்பவும்.




TSA-D/MM/2490/TM

நெஸ்லேயின் ஒரு தரமான தயாரிப்பு